[Mr. Speaker] [30th April 1960

I have also to announce that the Council has passed the following Bills without any recommendations:—

1. The Legal Practitioners (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960).

2. The Madras Coinage (Alteration of References) Bill, 1960 (L.A. Bill No. 9 of 1960).

## IV.—GOVERNMENT BILL.

### (1) THE MADRAS BUILDINGS (LEASE AND RENT CONTROL) BILL, 1959 (L.A. BILL NO. 20 OF 1959).

THE HON. SRI V. RAMAIAH: Sir, I beg to present the report of the Joint Select Committee on the Madras Buildings (Lease and Rent Control) Bill[a], 1959, (L.A. Bill No. 20 of 1959).

### (2) THE MADRAS APPROPRIATION (NO. 2) BILL, 1960 (L.A. BILL NO. 21 OF 1960).

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras Appropriation (No. 2) Bill, 1960 (L.A. Bill No. 21 of 1960) be taken into consideration".

Sir, I do not propose to make any speech at this stage. If hon. Members raise any points, I shall deal with them in my reply.

MR. SPEAKER: Motion moved—

"That the Madras Appropriation (No. 2) Bill, 1960 (L.A. Bill No. 21 of 1960) be taken into consideration."

SRIMATHI HEMALATHA DEVI: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள இந்த அப்ரோபிரியேஷன் பில்லை ஆதரித்து நான் ஒரு சில கருத்துக்களை எடுத்துரைக்க விரும்புகிறேன். நாட்டின் முன்னேற்றத்திற்காக, நாட்டின் சுபிட்சத்திற்காகா, நமது அரசாங்கம் அக்கறை செலுத்தி பல மான்யக் கோரிக்கைகள் கொண்டு வந்து அவைகளை எல்லோரும் ஏக மனதாக நிறைவேற்ற வேண்டுமென்று கேட்கிறுர்கள் என்றுல், உண்மையிலேயே நமது அமைச்சரவை இந்த நாட்டு மக்கள் சுபிட்சமாகவும், சந்தோஷமாகவும் வாழ வேண்டுமென்பதில் மிகுந்த அக்கறை செலுத்துகிறுர்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. அகற்காக, கண்டிப்பாக நாம் அரசாங்கத்தையும் அமைச்சரவையையும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேம் என்பதை நான் இந்தச் சந்தர்ப்பத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன். அந்தக் காலத்தில் பலர் பலவாறுக மன்னனை வாழ்த்தியபோதிலும் ஔவை வாழ்த்தியது "வரப்பு உயர" என்று அறிகிறேம். காரணம், வரப்பு உயர்ந்தால் நீர் உயரும், நீர் உயர்ந்தால் நெல் உயரும், நெல் உயர்ந்தால் அதாவது நெல் அதிக உற்பத்தி ஏற்பட்டால் நாட்டு மக்கள் சுபிட்சமாக வாழ்வார்கள், அப்படி குடி மக்கள் சுபிட்சமாக வாழ்ந்தால் அரசாட்சியை நல்ல முறையில் நடத்த முடியும், அரசாட்சிக்கும் நல்ல பெயர் கிடைக்கும் என்பதினுல்தான் ஔவை வரப்பு உயர என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்து

[a] Printed as Appendix VI on pages 1008-1044 infra.

30th April 1960] [Srimathi Hemalatha Devi]

வாழ்த்தினுர்கள். அதே போன்று பல மான்யங்களை அரசாங்கம் கொண்டுவந்திருக்கிற போதிலும், முக்கியமாக நீர்ப்பாசன மான்யம் என்பது குறித்து நான் சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். முதலாவதாக, ஔவை சொன்னது போல், நாடு நீர்வளம் பெற்றிருந்தால்தான், அதன் பலனுக உணவு உற்பத்தியை அதிகரிக்க முடியும், அப்படி உணவு உற்பத்தி பெருகினுல்தான் நாடு முன்னேறவும், நாட்டு மக்கள் நல்ல முறையில் வாழவும், நல்ல முறையில் ஆட்சி நடத்தவும் முடியுமாகையால் நமது அரசாங்கம் நீர்ப்பாசனத் திற்காக நம் மாகாணத்திலுள்ள பெரிய ஆறுகளில் அணைக் கட்டுகள் கட்டி முடித்துவிட்டார்கள். இன்னும் ஒரு சில ஆறுகள்தான் எஞ்சி நிற்கின்றன. அதோடு இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில்கூட சிறிய நீர்ப் பாசன திட்டங் களுக்காக ஏரி, குளங்கள் மாராமத்திற்காக அரசாங்கம் மிக்க அக்கறை செலுத்த முனைந்திருப்பது பாராட்டத் தக்கதாகும். இங்கு நான் ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். நமக்கு வாழ்க்கையில் ஏதாவது ஒரு குறை ஏற்பட்டால், அதற்காக நாம் கடவுளை வேண்டினுல் கடவுள் அதற்கு ஒரு வழி காண்பிப் பதில் தவறுவது கிடையாது. அதே போல் நமது கருணை வாய்ந்த அமைச்சரவையிடம், பொதுப் பணிகளை, பொது மக்களுக்காக வேண்டியதெல்லாவற்றையும் செய்வதற்கு, கடவுளிடம் அறிவிப்பதுபோல் நான் அமைச்சரவையிடம் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

கடவுள் எவ்விதம் தன்னை நம்புகிறவர்களின் குறைகளை தீர்க்க தவற மாட்டாரோ அதே நம்பிக்கையுடன் நமது அமைச்சர் அவர்களும் இந்தக் குறைகளையெல்லாம் நீக்க தவற மாட்டார்கள் என்ற நம்பிக்கையுடன் ஒரு சில வார்த்தைகளை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். நமது நாட்டில் நீர் பாசன திட்டங்கள் அதிகமாக நிறைவேற்றப்பட்டிருப்பதினுல் பல பாலைவனங்களாக இருந்த இடங்கள் எல்லாம் சோலைவனங் களாகி நமக்குக் காட்சி தருகின்றன. அந்த முறையில் பார்க்கும் போது சேலம் ஜில்லாவில் தர்மபுரி வட்டாரம் ஒரு பாலைவன மாக இருக்கிறது. இதை சோலைவனமாக ஆக்க வேண்டு மென்ருல் ஒரு சில திட்டங்களை அங்கு நிறைவேற்ற வேண்டும். அங்கே சின்னுறு என்று ஒன்று இருக்கிறது. அதன் குறுக்கே அணை கட்ட வேண்டுமென்று அங்குள்ள மக்கள் பல ஆண்டு களாக பல மனுக்கள், கோரிக்கைகள் விடுத்திருக்கின்ருர்கள். அது என்ன காரணத்தினுலோ நிராகரிக்கப்பட்டது. 1957-க்கு பிறகு கருணைமிக்க அமைச்சர் கனம் கக்கன்ஜி அவர்கள் மராமத்து இலாகா அமைச்சர் பொறுப்பேற்ற பிறகு அதை வந்து பார்வையிட்டார்கள். இந்த அணை மிக அவசியம். ஆகவே, இந்த அணையை கட்டலாம் என்று உறுதி கூறினுர்கள். அதன் பிறகு சீப்-என்சினியர் அங்கு வந்து பார்வையிட்டார். அந்த சின்னுற்றில் மட்டும் அணை கட்டுவதானுல் ரூ. 40 லட்சம் செலவாகும். அதோடு இன்னெரு இடத்தில் நான்கு கிளை ஆறுகள் வந்து சேருகின்றன. அந்த இடத்தில் அதாவது வெள்ளைக்கல் மலைச்சாரல், மல்லேசுரன்கோவில் என்ற இரண்டு

குன்றுகள் இருக்கின்றன. அதற்கிடையில் இந்த அணையை கட்டினால் 75 லட்சம் ரூபாய் செலவாகும் என்றும் அறிவித்திருப்பதாக அறிந்தேன். 1948-ல் சீப்-என்சினீயராக இருந்த வெங்கடாச்சாரியார் அவர்களும் இந்த 5 ஆறுகள் கூடும் இடத்தில் அணை கட்டுவதுதான் நல்லது என்று கருத்து தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே செலவுத் தொகை அதிகமானாலும் 100-க்கு 95 பேர்களுடைய கோரிக்கையாக இருக்கின்ற இந்த மல்லேஸ்வரன் கோயில் குன்று வெள்ளைக்கல் மலைச்சாரல் இவைகளுக்கிடையே அணையைக்கட்டி நிறைவேற்றுவதற்கு நமது முதலமைச்சர் அவர்களும் மராமத்து இலாகா அமைச்சர் அவர்களும் ஆவன செய்வார்கள் என்ற முழு நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முதலிலேயே கட்டி முடிக்க ஆவன செய்ய வேண்டுமாய் மிகப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். அதற்குப் பிறகு நீர்ப்பாசன திட்டங்கள் என்ற முறையில் தர்மபுரி தாலூகாவில் மலைப்பாங்கான பிரதேசங்களில் காட்டாறு வருகிறது. அவற்றில் சிறிய அணைகளைக் கட்டினால் அதன் மூலம் விவசாயத்தை அதிகப்படுத்த முடியும். பென்னுகரம் பிர்க்காவிலே மத்தளப்பள்ளம், பெரிய பள்ளம், சாமத்தாள் பள்ளம் என்னும் சிறிய அணைகளை விரைவிலே கட்டினால் அப்பகுதியிலுள்ள மக்களுக்கு வாழ வழியும், சுபிட்சமும் ஏற்படும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதோடு இது மாதிரி பல மான்யங்களை இந்த சபையில் அமைச்சர்கள் சமர்ப்பிக்கின்றார்கள் என்றால் அவற்றை நாம் ஏகமனதுடன் வரவேற்க வேண்டியது உரியதாகும். குறிப்பாக இந்தியா தேசத்தில் 75 லட்சத்திற்கு மேற்பட்ட கிராமங்கள் இருக்கின்றன. இந்த கிராமங்கள் எல்லாம் ராமராஜ்யம் என்று சொல்லுகின்ற கிராம ராஜ்யமாக ஏற்பட வேண்டும். இதற்காக நமது அரசாங்கம் பல அரிய திட்டங்களை செய்து வருகிறார்கள். இந்த திட்டங்களை எல்லாம் சமுதாய நலத் திட்டத்தின் கீழ் செய்து வருகிறார்கள். இதில் கிராம சேவக்—என்பவர்கள் நல்ல முறையில் பணியாற்றி வருகிறார்கள். அவர்கள் செய்கின்ற காரியங்களை எல்லாம் நல்ல முறையில் கண்காணிக்கவேண்டும். அவர்கள் மக்களிடையே என்னென்ன காரியங்களைச் செய்து வருகிறார்கள் என்பதைக் குறித்து இந்த இலாகா வட்டார வளர்ச்சித் திட்ட அதிகாரி அவர்களிடம் சமர்ப்பிக்கவேண்டும். இதோடு இதில் நல்ல முறையில் பிரசாரம் செய்வதற்கு அவர்களுக்கு தகுதி இருக்கின்றதா என்பதை கவனித்து அவர்களை நியமிக்கவேண்டும். அப்போது தான் அரசாங்கத்திலே செய்யப்படுகின்ற வேலைகளைப்பற்றி மக்களிடத்தில் நல்ல முறையில் எடுத்து விளக்கிக் கூற முடியும். சிலர் கருதுகிறார்கள், இவர்கள் மூலமாக கட்சிப் பிரசாரம்தான் நடக்கிறது என்றும். அமைச்சர்களும்கூட கட்சி பிரசாரத்திற்காகவே சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள் என்றும் கருதுகிறார்கள். அம்மாதிரி நினைப்பது தவறு என்பதை எடுத்துக்கூற விரும்புகிறேன். அமைச்சர் ஒரு பகுதிக்கு வருகிறார் என்றால் அதன் காரணமாக அந்த இடத்தில் பல வேலைகள் வெகு துரிதமாக நடக்கிறது. இதனால் மக்களுக்கு லாபமா அல்லது

30th April 1960] [Srimathi Hemalatha Devi]

அமைச்சர்களுக்கு லாபமா என்பதைப் பார்க்கவேண்டும். ஒரு இடத்தில் உள்ள மக்கள் ஒரே கட்சியினராகத்தான் இருந்து விடுகிறார்கள் என்று நினைத்துவிட முடியாது. எல்லா கட்சியினரும் இருக்கின்றார்கள். எனவே அப்பகுதியில் அமைச்சர் வருகையால் ஏற்படும் நன்மைகள் அங்குள்ள அனைவருக்குமே பயன் தருகிறது. அதோடு சமுதாய நல திட்டத்தில் தியாகிகள் தான் அதிகமாக இருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் தியாகிகளாக இன்று இருப்பவர்கள் தான் அன்று நாட்டுக்காக கஷ்டப்பட்டு, நஷ்டப்பட்டு, உழைத்து, உதைபட்டு அடிபட்டு தங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்திருக்கிறார்கள். அவர்களுக்கும் அவர்கள் சந்ததிக்கும்தான் உண்மையிலேயே நாட்டுப்பற்று அதிகமாக இருக்கும். ஆகவே அவர்களும் அவர்களுடைய குடும்பங்களில் உள்ளவர்களும் இந்தத் திட்டத்தில் அதிகமாக இருந்தால் நாட்டு மக்களுடைய கஷ்டங்களை அறிந்து அதற்கு தகுந்தவாறு பணியாற்றி வருவார்கள் என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். மேலும் அமைச்சர் இம்மாதிரியான பல கோரிக்கைகளை கொண்டு வரும்போது அதை நாம் ஏகமனதாக ஆதரித்து அரசாங்கம் நல்ல முறையில் சேவை செய்வதற்கான வழி வகைகளையும் கூறி நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். அப்போதுதான் நம்முடைய நாட்டுக்காக போடப்பட்டிருக்கும் ஐந்தாண்டு திட்டங்களெல்லாம் சீக்கிரமாக நிறைவேறும். இதற்கு எல்லாக் கட்சிகளும் ஒத்துழைக்க வேண்டுமே தவிர இதற்கு எதிர்ப்பு தெரிவித்து தடை செய்வதனால் எந்த விதமான பிரயோசனமும் இல்லை. நாட்டின் முன்னேற்றம் வேண்டாம் என்பவர்கள்தான் எதிர்க்க முன்வருவார்கள். ஆகவே சர்க்கார் கொண்டு வருகின்ற கோரிக்கைகளை எல்லாம் ஆதரித்து, அன்னிய நாட்டுத் தலைவர்கள் எல்லாம் இந்தியாவின் திட்டங்களைப் பார்த்து அதிசயித்து இந்திய பிரதமரை வாழ்த்து மளவில், நமது நாடு முன்னேற்றம் அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் எல்லோரும் முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டு இந்த உரையை ஆற்றுவதற்கு சந்தர்ப்பம் தந்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI S. RAMASWAMI THEVAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த கோரிக்கையின் மீது நான் சில விஷயங்களைப் பற்றி பேச விரும்புகிறேன். குறிப்பாக அரந்தாங்கி பகுதியில் ஏற்பட்டிருக்கும் கஷ்டங்களைப்பற்றி எடுத்துச்சொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன் சுமார் 10 தினங்களுக்கு முன்னால் ஒரு அட்ஜேர்ன்மெண்ட் மோஷன் கொடுத்திருந்தேன், அதன் பேரில் இதுவரை நடவடிக்கை எடுக்கவில்லை . . . அழுத பிள்ளை தான் பால் குடிக்கும், வாயுள்ளவனே பிழைப்பான் என்பது போலிருக்கிறது. இந்தச் சமயத்திலாவது அதைப்பற்றிப் பேச வாய்ப்பு கிடைத்ததுபற்றி மகிழ்ச்சியடைகிறேன்.

MR. SPEAKER: அவ்விதம் அட்ஜேர்ன்மெண்ட் மோஷன் ஒன்றும் வரவில்லையே.

Sri S. RAMASWAMI THEVAR: அட்ஜேர்ன்மென்ட் மோஷன் அல்ல, ரூல் 41-ன் கீழ் இந்த விஷயத்தைப்பற்றி எழுதிக் கொடுத்திருந்தேன். அதாவது எங்கள் பகுதியில் மழை தேவைக்கு இல்லே என்பதோடு, அங்கு ஏற்பட்டிருக்கின்ற கஷ்டம் கொஞ்சமல்ல. நாட்டில் பஞ்சம் ஏற்பட்டிருக்கின்றது. அதோடு பயிரெல்லாம் வாடிக் கிடக்கின்றன. அந்தப் பகுதிக்கு சில நாட்களுக்குமுன் வந்திருந்த கனம் மின்சார அமைச்சர் அவர்கள் பயிர் மிகவும் வாடிக் கிடப்பதைக்கண்டு மிகவும் வருத் தப்பட்டார். உண்மைக்கு மாருக உரைத்து மக்களிடம் மதிப்பை பெற சில அங்கத்தினர்கள் பேசுகிருர்களென கனம் நிதி அமைச்சர் இம்மன்றத்தில் ஒரு சமயம் பேசினுர்கள். நான் சொல்வதில் எவ்வளவு உண்மையிருக்கிறது என்பதை அறந்தாங்கி தாலூகாவில் மழை எத்தனே அங்குலம் பெய்திருக்கிறது என்ற கணக்கைக் கொண்டே தீர்மானிக்கக்கோருகிறேன். 10 அங்குலத் திற்கு குறைவாகவே மழை பெய்திருக்கிறது. இம்மழையைக் கொண்டு விளேச்சல் காணமுடியுமா? சிந்திக்க வேண்டுகிறேன். அவ்வளவு வரண்ட நிலேமை அங்கு ஏற்பட்டிருக்கிறது. மக்கள் பெரும் அவதிக்கு உள்ளாகியிருக்கிருர்கள். இந்த வருஷத்திற்கு வரி வஜா செய்யவேண்டுமென்றும், கடன்கள் வசூலிக்கப் படுவதை ஒத்திப்போடவேண்டும் என்றும் கேட்டிருக்கிருேமே தவிர, சர்க்காருக்கு உள்ள வரிகளேச் செலுத்தாமல் இருக்க வேண்டும் என்பது அல்ல. கடன்களேத் தள்ளிவிட வேண்டு மென்றும் கேட்கவில்லே. கடன்களே ஒரு வருஷத்திற்கு ஒத்திப் போட்டால், அடுத்த ஆண்டிலே வட்டியுடன் செலுத்திவிட அங்குள்ள மக்கள் தயாராயிருக்கிருர்கள். அது விஷயம் கவனிக்கப்படவில்லே என்பதைக் குறித்து நான் வருந்துகிறேன். சாதாரண வைக்கோல் கட்டு மூன்று ரூபாய்க்கு வாங்கினல், ஒரு மாட்டுக்கு இரண்டு நாட்களுக்குக் கூட காணுத நிலேயில் வைக்கோல் விலே உயர்ந்திருக்கிறது. அந்த அளவு பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. 18 வருஷ காலத்தில் இம்மாதிரி பஞ்சம் ஏற்பட்டதே இல்லே. இதுபற்றி கனம் மந்திரி அவர்களுக்கு அக்டோபர் மாதத்திலே தெரிவித்திருந்தேன். புஞ்சைத் தானியங்கள், கடலே முதற்கொண்டு சிவப்புக் கம்பளிப் பூச்சி களினுல் பாதிக்கப்பட்டு, மக்கள் பெரும் கஷ்ட நஷ்டத்திற்கு உள்ளாகியிருக்கிருர்கள் என்பது பற்றியும் கார் நெல் பயிர் பட்டுப்போய்விட்டது என்று டிசம்பர் மாதத்தில் குறிப் பிட்டிருந்தேன். அறந்தாங்கியில் எல்லாப் பகுதியிலும் அல்ல; தண்ணீர் பாயக்கூடிய பகுதியில் நியாயமாக விளேந்திருக்கிறது. ஆனல், மானுவாரிப் பிரதேசங்களில் விளேச்சல் இல்லே. கனம் மந்திரி அவர்கள் ஒரு சமயம் "125 கிராமங்களுக்கு 'ரெமிஷன்' கொடுத்திருக்கிருேம்" என்று குறிப்பிட்டிருந்தார். அதிகாரி களின் கணக்குப்படியே 125 கிராமங்கள் என்ருல், எத்தனே கிராமங்கள் உண்மையிலேயே பாதிக்கப்பட்டிருக்கும் என்பதை நாம் அறிய முடியும். தயவுசெய்து கடன்களேக் கெடுபிடியாக

9-30 a.m.

30th April 1960] [Sri S. Ramaswami Thevar]

வசூலிக்காமல், ஒத்திப்போடவேண்டுமென்றுதான் கேட்கிறோமேயொழிய, கடன்களைத் தள்ளிவிடவேண்டுமென்று கேட்கவில்லை. இதுபற்றி கனம் மந்திரி அவர்கள் கவனம் செலுத்தவேண்டுமென்று தயவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அறந்தாங்கி தாலுகாவில் பாலகிருஷ்ணபுரம் கிராமம் பற்றி பல ஆண்டுகளாக குறிப்பிட்டு வந்திருக்கிறேன். அதுபற்றி சர்க்கார் சிறிதும் கவனம் செலுத்தவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அங்கு நாராயணன் பண்டிதர், கைலர்சம் வகையரு பெயர்களுக்கு அரசாங்கக் கஜானாவிலிருந்து கிடைக்க வேண்டிய பணம் கிடைக்கவில்லை. "பணம் பெற்றுக்கொண்டு போங்கள்" என்று கஜானாவிலிருந்து அறிக்கை கொடுத்திருந்தார்கள். அதன்படி பணம் பெற வேண்டியவர்கள் வந்திருந்தார்கள். "இன்று பணம் இல்லை, இன்னொரு நாள் வாருங்கள், தேதி குறிப்பிடப்படும்" என்று கஜானாவிலுள்ளவர்கள் சொல்லியனுப்பிவிட்டார்கள். இன்னொரு தினம் வந்து பணம் கேட்டார்கள். ஆனால், பணம் வேறு வழியிலே போய்விட்டது. யாருக்குப் பணம் வர வேண்டுமோ அவர்களுக்குப் பணமே கிடைக்கவில்லை. அதிகாரிகளுக்குத் தெரிந்து வேறு வகையில் பணம் போயிருக்கிறது. இது பற்றி எத்தனை முறையீடுகள் செய்தும், அவை கவனிக்கப்படவில்லை. வருஷம் ஐந்துக்கு மேல் ஆகின்றது. "யாரோ பணத்தை வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள், கைரேகை பார்க்கிறோம். அது செய்கிறோம், இது செய்கிறோம்" என்று காலம் கடத்தப்படுகிறதே தவிர, ஐந்து ஆண்டுகளாக ஒருவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இதில் சர்க்கார் சிறிது கவனம் செலுத்தவேண்டும். அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய கிஸ்திப் பணத்தைச் தற்செயலாக யாராவது இடம் மாறுதலாகச் செலுத்திவிட்டால், அப்பொழுது அந்தப் பணத்தை வாங்காமல் விட்டுவிடுவார்களா சம்பந்தப்பட்ட அதிகாரிகள் என்று நான் கேட்கிறேன். மிரட்டி, உருட்டி, ஏதேதோ செய்து வசூலித்துவிடுவார்கள் அல்லவா? அது போல்தானே அரசாங்கம் செலுத்த வேண்டிய பணமும் காலா காலத்தில் உரிய நபருக்குச் செலுத்தப்படவேண்டும்? குறிப்பிட்டவர்களுக்குப் பணம் வந்து சேரும் முறையில் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்த வேண்டுமென்று மறுமுறையும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்கள் பிரதேசம் பஞ்சப் பிரதேசம் என்பது அமைச்சர் அவைக்குத் தெரியும். அப்பகுதிக்கு ஸி.எம்.பி. தண்ணீர் கொண்டுவர முடியாவிட்டாலும் கூட, அங்குள்ள காட்டாறுகளில் அணைகள் கட்டித் தண்ணீரைத் தடுத்து, மக்களுக்கு வசதி அளிக்கும்படியாகக் கெட்டுக்கொள்ளுகிறேன். என் பகுதி ஏற்கெனவே இலங்கையையும், சிங்கப்பூரையும் நம்பிக் கொண்டிருந்த பகுதி. அந்தப் பகுதி மக்கள் அன்னிய நாட்டை நம்பிக்கொண்டிருந்தார்கள். இனி நம்ப முடியாது. அங்கு போக வழியில்லை. அப்படியிருக்கும்போது, துரிதமாக பாசன வசதிகளைச் சர்க்கார் செய்துக் கொடுத்தாலன்றி அங்கே

[Sri S. Ramaswami Thevar] [30th April 1960

மக்கள் வாழ முடியாது, நிரந்தரமாகப் பஞ்சம் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். இதிலே சிறிது கவனம் செலுத்தி, வீணுக கடலில் தண்ணீர் சேரும் வகையில் ஓடிக் கொண்டிருக்கும் காட்டாறுகளைத் தடுத்து பாசனத்திற்குப் பயன்படுத்தும் திட்டங்களில் கவனம் செலுத்தவேண்டும். சில சமயங்களில் திட்டங்கள் நிறைவேறுகின்றன. நிறைவேற்றப் படவேண்டிய திட்டங்களை துரிதமாக முதல் இடம் கொடுத்து நிறைவேற்றி அறந்தாங்கிப் பகுதிகளுக்கு வசதி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அறந்தாங்கிப் பகுதியை ப்ளாக் டெவலப்மென்டில் சேர்க்க வேண்டும். அதிலே முதல் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தி, எங்களுக்கு அந்தச் சலுகையைக் கொடுக்குமாறு கேட்டுக்கொண்டு இத்துடன் என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

* SRI K. ANBAZHAGAN: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நிதி ஒதுக்கீடு மசோதாவின் மீது, என்னுடைய கருத்துக்கள் சிலவற்றைத் தெரிவிக்க வாய்ப்புப் பெற்றதற்காக நான் மகிழ்கிறேன்.

இந்த ஆண்டு வரவு-செலவுத் திட்டத்தையொட்டிய விவாதத்தில், பலவேறு பிரச்னைகளைச் சட்ட மன்றத்தில் எடுத்துச்சொன்னபோதிலுங்கூட, அமைச்சர்கள் பொதுவாக அந்தக் குறைகளைக் கவனிப்பதாக வாக்குறுதி அளித்தார்களே தவிர, சொல்லப்பட்ட குறைகளைப்பற்றித் தனித்தனியாக அவைகளுக்குப் பதிலளிக்கும் வாய்ப்பினை அவர்கள் ஏனோ மேற் கொள்ளவில்லை. ஒரு வேளை, போதுமான அளவு நேரம் இல்லாத காரணமாக இருக்கலாம்; அல்லது, நினைவு செலுத்த முடியாத காரணமாக இருக்கலாம். எனவே, அந்தக் குறைகளை திரும்ப நினைப்பூட்டுவது மூலமாக, ஓரளவு இந்த ஒதுக்கீடு மசோதாவின் மூலமாக நியாயம் பெறலாம் என்று நான் எதிர்பார்க்கின்றேன்.

கல்விக் கொள்கையைப் பொறுத்து கல்வி அமைச்சர் அவர்கள், கல்லூரிகளில் தமிழைக்கொண்டே பாடம் பயிற்று விக்க வேண்டுமென்று மேற்கொண்டிருக்கும் கொள்கை, சென்னை மாநில அரசாங்கத்தில் இன்றைய கல்வி அமைச்சர், அமைச்ச ராக வருவதற்கு முன்னுலேயே தோன்றிய கொள்கையாகும். அந்தக் கொள்கையை திராவிட முன்னேற்றக் கழகம் மனமார வரவேற்பதுடன் ஆதரிக்கிறது என்று இன்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதை நான் குறிப்பிடுவது—ஏதோ சில நடைமுறைகளில் ஏற்படுகிற மாறுபாடு காரணமாக, தமிழ் பாடமொழியாக வருவதைத் திராவிட முன்னேற்றக் கழகம் ஆதரிக்கிறதா என்று கல்வியமைச்சர் சந்தேகிக்கிறுர்கள். எங்கும், எதற்கும் தமிழ் வரவேண்டுமென்ற கொள்கையிலிருந்து தோன்றியதுதான் திராவிட முன்னேற்றக் கழகமே. அது மட்டுமல்லாமல்,

30th April 1960] [Sri K. Anbazhagan]

கல்லூரிகளிலே தமிழ் பயிற்று மொழியாக வருகின்றபோது தான் நாட்டு மக்கள் அதனுல் முழுப் பலனையும் பெறமுடியும் என்ற முழு நம்பிக்கை கழகத்திற்கு உண்டு. ஆங்கிலம் மிகச் சிறந்த மொழியாக இருக்கலாம்; மிக உயர்ந்த கருத்துக்களை ஆங்கிலத்தின் மூலமாகப் பெறமுடியும்; விஞ்ஞான மேதைத் தன்மையை ஆங்கிலத்தினுலே பெறலாம்; என்ருலும் அது தமிழனுக்கு ஒரு மனிதனுடைய சொந்தக் கண்ணைப் போன்றது அல்ல, அன்னியரின் கண்ணை ஒட்ட வைத்தது போன்றதே ஆகும் என்ற வேறுபாட்டை உணர்ந்திருக்கிருேம். சொந்தக் கண்ணுகிய தமிழிலேதான் உயர் தரக் கல்வியை இந்த நாட்டு மக்கள் இளைஞர்கள் பெறவேண்டும், பெறும் வாய்ப்பைக் கொடுக்க வேண்டும். ஆனல், இன்றைய தினம் தமிழ் மொழியிலே கல்லூரிகளில் பாடம் பயிற்றுவிப்பதற்கான திட்டத்தை அமைச்சர் அவர்கள் ஆர்வத்தோடு தீட்டும் நேரத்தில், சிற்சில குறைபாடுகளும் இடையில் ஏற்பட்டுத்தான் இருக்கின்றன.

பல்கலைக் கழகப் புகுமுக வகுப்பில் (ப்ரி-யூனிவர்ஸிடி க்ளாஸ்) இன்றைய தினம் பாடங்கள் தமிழில் பயிற்றுவிக்கப்பட வில்லை. என்னைக் கேட்டால், என்னுடைய அறிவுக்கு எட்டிய வரையில் நான் சொல்வேன். இந்த இடைப்பட்ட வகுப்பில் தமிழ் பாடம் நடத்துவதற்கான வாய்ப்பினை நாம் அளித்திருக்க வேண்டும். இதுவரையில் அளிக்காமலிருந்தாலும், அடுத்த ஆண்டிலாவது இந்த வாய்ப்பினை அளித்தால் தான் உண்மையி லேயே கல்லூரியில் இத்திட்டம் நிறைவேற அது உறு துணையாக அமைவதோடு, சில பேருக்கு ஏற்படும் ஐயுறவும் ஏற்படாமல் இருக்கும்.

சட்ட மன்றத்தில் கேள்வி கேட்டபோது அமைச்சர் அவர்கள் பதிலளிக்கையில், "பல்கலைக் கழக புகுமுக வகுப்பில் பயிலும் மாணவர்கள் அங்கிருந்து மருத்துவக் கல்லூரிக்கும், பொறியியற் கல்லூரிக்கும் செல்லும் காரணத்தால், அங்கு தொடர்ந்து ஆங்கிலத்தில் படிக்கவேண்டிய சூழ்நிலை இருப்பதால் இனியும் இருக்கவேண்டுமாதலால், அதற்கான அடிப்படை என்ற வகையில், புகுமுக வகுப்பில் ஆங்கிலத்திலேயே பயிலுகிருர்கள்" என்று தெரிவித்தார்கள். ஆனல் நான் தெரிவித்துக் கொள்ள விரும்புவது இதுவாகும். அங்கிருந்து செல்லும் எல்லா மாணவர்களுமே பொறியியற் கல்லூரிக்கோ மருத்துவக் கல்லூரிக்கோ செல்கிருர்கள் என்று துணிவதற்கில்லை. விண்ணப் பிப்பவர்களுக்குள்ளேயே பாதி பேருக்கு மேல் அங்கு இடமில்லை. எனவே, சூழ்நிலையைக் கருதி பார்க்கும்போது, அவர்களில் பெரும்பாலோர் புதிய பி.ஏ. வகுப்பிற்கு வர வேண்டியிருக் கிறது. அந்த பி.ஏ. வகுப்பு புது முறையில் அமைகின்ற காரணத்தால் அது மூன்று ஆண்டுப்படிப்பு; அதற்கு முற்பட்ட தாக இருக்கும் புகுமுக வகுப்பு ஓராண்டுக் காலம்; இந்த ஓராண்டுக் காலத்தில் ஆங்கிலத்தில் பயிற்சி அளிக்கப்படும் நிலை. இதில் ஆங்கிலத்தின் மூலம் படித்துத் தேர்வு எழுதிவிட்டு, தேர்ச்சி பெற்று பி.ஏ. வகுப்புக்கு வருவது

என்ருல், புகுமுக வகுப்பு மாணவர்கள்—ஏதோ பெரிய பாவம் செய்துவிட்டவர்கள்போல்—ஒரு கடுமையான தண்டனைக்கு ஆளாகியிருக்கிருர்கள். ஓராண்டுக் காலத்தில் ஆங்கிலத்தின்மூலம் படித்து எந்தத் தெளிவும் தேர்ச்சியும் பெற முடியாது. எஸ்.எஸ்.எல்.ஸி. வரையில், அதாவது பத்தாவது வரையில், தமிழில் படித்தவர்கள், மறுபடியும் பி.ஏ. வகுப்புக்கு வரும்போது தமிழில் படிக்கலாம் என்ற நிலைமையில், இடையிலே ஆங்கிலத்தில் சரியாகப் படிக்க முடியாததால்—படிக்காததால் பல பேர் தேர்விலே தோல்வி அடைய நேரிடு கிறது. என்னுடைய தனி அனுபவத்தைச் சொன்ஞல், அதற்கு மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்—நான் பத்தாவது படித்துவிட்டுப் பல்கலைக் கழகத்திற்குள் நுழைந்தபோது அங்கு, நான் மற்றவர்களினும் சிறுவனுக இருந்த காரணத்தால், முதல் ஆண்டுக் காலத்திலே எனக்கு ஆங்கிலத்தில் நடத்தப்பட்ட பாடங்களைப் புரிந்துகொள்ளமுடியவில்லை. எங்களுக்குப் பாடங்கள் ஆங்கிலத்தில் நடந்தன. (Economics) பொருளியல் பாடம் நடந்தது. ஆசிரியர் சொல்வதையெல்லாம் நான் தமிழிலேயே தான் மனதிலே எண்ணிக்கொண்டேன்—கோதுமை எங்கே விளைகிறது, நெல் எங்கே விளைகிறது, துணி எந்த இடத்தில் உற்பத்தியாகிறது என்று அறிந்துகொண்டு—பல்கலைக் கழகத்தில் நடந்த முதல் தேர்வில்—கால் ஆண்டுத் தேர்வில், நான் ஆங்கில வாக்கியங்களில் பதில் எழுதாமல் ஒருசொல்லளவில் பெயர்களை விடையாக எழுதியிருந்தேன். ஆனல், அந்த நிலைமையில் இன்றையதினம் இருக்கும் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு மாணவர்கள் பலரும் இடர்படுகிருர்கள். இந்தத் தொல்லைகளால் அதில் மாணவர்கள் பலர் தேராத காரணத்தால் பி.ஏ. வகுப்பில் சேரும் எண்ணிக்கையும் குறைகிறது. எனவே அமைச்சர் அவர்களை ஆசிரியராக இருந்திருக்கிறேன் என்ற உரிமையோடு வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். பல்கலைக் கழக புகுமுக வகுப்பிலே தமிழில் பாடங்களை போதிப்பதற்கு நாம் திட்டம் இட்டாக வேண்டும். பி.ஏ. வகுப்பு தமிழிலே வருவதற்கு உறுதுணை அது. அந்த வகுப்பிலே யாராவது என்ஜினியரிங் கல்லூரிக்குச் செல்லவேண்டும், மருத்துவக் கல்லூரிக்குச் செல்லவேண்டும், ஆகவே ஆங்கிலத்தில் படிக்கிருேம் என்று சொல்வார்களேயானல், அப்படி விரும்புகிறவர்களுக்கு வேண்டுமானல் ஆங்கிலத்தில் படிப்பதற்கு விதி விலக்கு அளிக்கலாம். பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பை ஆங்கிலத்தினிடம் ஒப்படைத்துவிட்டு, பி.ஏ. வகுப்பை அமைச்சர் அவர்கள் கைப்பற்றியது—தமிழுக்காகத் தான் என்ருலும் உண்மையாகவே ஒரு திட்டம் பலனுள்ள முறையில் நிறைவேறுவதற்கு மாறுபட்டதாகும். அதுமட்டுமல்லாமல், பி.ஏ. வகுப்பில் தமிழ் பாடமொழியாக வருகின்றபோது ஒரு துறைக்கு ஒரு பாடப் புத்தகம் மட்டும் எழுதுவது சிறந்த முறையல்ல. ஒரு துறைக்கு 3, 4 பாட புத்தகங்கள் வருவதற்கு நாம் ஊக்குவிக்கவேண்டும். இதற்கான செலவுத் தொகையைக் கூட மத்திய சர்க்கார் தர முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். அங்கே தமிழையும் ஒரு தேசிய மொழியாக ஒப்புக்கொண்டிருக்கிருர்கள் என்பதால்

30th April 1960] [Sri K. Anbazhagan]

உதவி கேட்கக்கூடிய நிலே இருக்கிறது. எவ்வளவுதான் தந்திர மாக இந்தியை நுழைத்துக்கொண்டு வந்தாலும், அதே நேரத்தில் தமிழுக்குரிய செலவுத் தொகையை தர அவர்கள் இசைந்தாக வேண்டும். எனவே அதைப் பெற்று ஒரு துறை பாடத்திற்கு 2, 3 புத்தகங்கள் எழுதுகின்ற முறையைக் கையாளவேண்டும். இவ்வாறு ஊக்குவிக்கும் முறையிலே முதலில் ஒவ்வொரு பாடத் துறையிலேயும் இருக்கும் புத்தகங்களில் சில பகுதிகளைத் தமிழில் மொழி பெயர்த்து அனுப்பும்படி பல பேர்கள் கேட்டுக்கொள்ளப் பட்டார்கள். கல்லூரித் தமிழ்க் குழுவினர் முறைப்படி பல பேர்களிடத்திலிருந்து மொழிபெயர்ப்புக் கட்டுரைகளை வாங்கினுர்கள், எது சிறந்தது என்றும் பரிசீலனை செய்துகொண்டிருந்தார்கள். ஆனல், பின்னர் அது ஏனே கைவிடப்பட்டு மொழி பெயர்ப்புப் பணி நிபுணர்களிடம் நேரிடையாக ஒப்படைக்கப் பட்டுவிட்டது. என்னுடைய அறிவுக்கு எட்டியவரையில் பல அறிஞர்கள் இப்படிப்பட்ட புத்தகங்கள் எழுதுகின்ற பொழுது தான் சில சிறந்த புத்தகங்கள் கிடைக்குமே தவிர, ஒரே ஒரு நிபுணர் புத்தகம் எழுதுகிருர் என்ற நிலேயில் மாணவர்கள் ஐயுறவு அத்தனையும் தீரக்கூடிய முறையில் புத்தகங்கள் கிடைப்பது கடினமே. பி.ஏ. வகுப்புப் புத்தகம் எழுதுகிறவர்கள், புகுமுக வகுப்பிற்குரிய பாடபுத்தகங்கள் எழுதுவது எளிதே யாகும். பொருளாதாரத்திற்கும் வரலாற்றுப் பாடத்திற்கும், அவர்களுக்கு தேவைப்படுகின்ற விஞ்ஞான பாடத்திற்குங்கூட தமிழிலே புத்தகம் எழுத முன்வரவேண்டும். நாளையதினம் உயர் நிலேப்பள்ளி இறுதி வகுப்பாக, புகுமுக வகுப்புக்கு ஈடான ஹையர் செகண்டரி வகுப்பு என்னும் வகுப்பு ஏற்படுகின்ற காலத்தில் பள்ளியில் அவர்கள் தமிழிலேதான் படித்தாகவேண்டும். இப்பொழுது புகுமுக வகுப்பிற்குத் தமிழிலே புத்தகம் எழுதத் தொடங்கினல், அந்தப் புத்தகம் ஏறத்தாழ அதே தரமுள்ள ஹையர் செகண்டரி வகுப்புக்குப் பயன்படக்கூடிய நிலேதான் இருக்கும். அது எழுதுபவர்கட்கு ஒரு அனுபவத்தையும் உண்டாக்கும். அந்த அனுபவம் நிச்சயமாக தமிழ் வளர்ச்சிக்குப் பயன்படும். எனவே, இந்த வகையில் கவனித்து புகுமுக வகுப்பிலேயும் தமிழிலே பயிற்றுவிக்கும்படிச் செய்வது சிறந்தது • என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஒரு வேளை வருகிற ஜுலேயிலேயே ஒரு கல்லூரியில் பி.ஏ. வகுப்பு தமிழில் வர இருக்கிறது, அதற்குப் பின்னரா புகுமுக வகுப்பைத் தமிழிலே தொடங்குவது என்று கவலேப்படவேண்டாம். இந்த ஆண்டில் பி.ஏ. வகுப்பில் பயிற்சிக்காக—நடத்திப் பயன் காண—பரிசீலனை செய்வதற்காகத் தமிழில் பாடங்களைத் தொடங்கினலும், அடுத்த ஆண்டு புகுமுக வகுப்பை தமிழில் தொடங்கினல், அதற்குப் பின்னல் 1963–64-ம் ஆண்டு முதல்—எல்லாக் கல்லூரிகளிலும் பி.ஏ. வகுப்பைத் தமிழிலே நடத்து வதற்கு புகுமுக வகுப்பு இடையூருக இல்லாமல் உதவியாகவே இருக்கும் என்ற நிலேமை ஏற்படும். இதை அமைச்சர் அவர்கள் கவனித்து கல்லூரித் தமிழ்க் குழுவினிடம் அந்தக் கடமையை ஒப்படைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

[Sri K. Anbazhagan] [30th April 1960

மற்றென்று, இந்தக் கல்லூரித் தமிழ்க் குழு செம்மையான முறையில் பணியாற்றுவதை நான் பாராட்டுகிறேன். ஆனுலும், இந்தக் குழு முதல் கட்டத்தில் பணியாற்றுவதினல் சிற்சில தவறுகள் ஏற்படத்தான் செய்யும். குறிப்பாக ஒன்று மட்டும் சொல்லுகிறேன்—கேலி செய்வதற்காக அல்ல. "ஸ்டாடிஸ்டிக்ஸ்" என்பதற்கு "புள்ளியல்" என்று மொழி பெயர்த்திருக்கிறுர்கள். புள்ளியல் என்றுல் தமிழிலே பறவைஇயல் என்று பொருள்படும். ஆகவே, புள்ளிஇயல் என்று இருக்கவேண்டும் அல்லது புள்ளிகளியல் என்று இருக்கவேண்டும். "ஸ்டாடிஸ்டிக்ஸ்" என்பதற்கு புள்ளி ஒப்பியல் என்பது பொருந்தும், கருத்தைத் தெளிவாகவும் விளக்கும். இம்மாதிரி சொற்கள் தேர்ந்தெடுப்பதிலே மிகவும் ஆழ்ந்த கருத்து செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து, நம்முடைய சென்னை மாநிலத்தில் (குறுக்கீடு) புள்ளியல் குறித்து தமிழ் அகராதியைப் பார்த்த பிறகுதான் சொல்லுகிறேன். புள்ளி இயல் என்ற சொல் தெளிவானது. அதைவிடத் தெளிவாக புள்ளி ஒப்பு இயல், என்றே அல்லது புள்ளிகள் இயல் என்று பன்மையிலோ இருக்குமானுல், அது சிறப்பாக அக்கருத்தை நல்கும். புள்ளியல் என்பது எழுத்துப் பிழையாகக்கூட இருக்கலாம். நான் அவர்களுடைய நிபுணத்துவத்தைக் குறைத்து மதிப்பிட விரும்பவில்லை.

தமிழகத்தில் இந்தி நுழைவதைப்பற்றி பல நேரங்களில் கல்வி அமைச்சர் அவர்கள் வருத்தம் தெரிவித்திருக்கிறுர்கள். உள்துறை அமைச்சர் அவர்கள் வடநாட்டில் ஒரு சுற்றுப்பயணம் நடத்தியபிறகு அங்கு மைல் கற்களிலும் இந்தி மட்டுமே இருப்பது கண்டு அந்த வேதனை தாங்காமல் கடுமையாகச் சொன்னுர்கள் "மைல் கல்லில் இந்தியில் எழுதப்பட்டிருப்பதால் செல்ல வேண்டிய மைல்கள் என்ன என்று தெரிந்துகொள்ள முடியாத நிலை ஏற்படுகிறது," என்று கண்டித்தார்கள். மனவேதனை ஏற்படும்பொழுது இந்தியைக் கண்டிக்கிறுர்கள். மகிழ்ச்சி ஏற்படும்பொழுது இந்தியை வரவேற்க ஆரம்பிக்கிறுர்கள். இந்த இக்கட்டான நிலைமை தமிழகத்திற்கு ஏற்பட இருக்கிற தீங்குக்கு அடையாளம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். வடநாட்டில் உள்ள மத்திய சர்க்கார் இந்தியைப்பற்றி எந்தவிதமான முறையைக் கையாண்டாலும், நம்முடைய சர்க்கார் தெளிவான ஒரு கொள்கையைக் கையாளவேண்டும். மைல் கல்லில் இந்தியில் எழுதப்பட்டிருந்தால் அது தமிழ் நாட்டு மக்களுக்கு எந்த விதத்திலும் பயன்படவில்லை. ஆனுல் வடநாட்டார்கள் இங்கேயே சுற்றுப்பயணம் செய்வதாக நினைத்துக்கொண்டு கல்வி அமைச்சர் ஒரு உதாரணம் கூட எடுத்துக் கூறினுர்கள். குருடனிடம் இருக்கிற விளக்கு அவனுக்குப் பயன் படாவிட்டாலும், மற்றவர்களுக்கு பயன்படுகிறது—கண் தெரிந்தவர்களுக்கு பயன்படுகிறது என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். அந்த உதாரணத்தின் உள்ளே கூட நான் சொல்ல விரும்பவில்லை. ஆனுல், பொதுவாகக் குருடன் கையில் விளக்கு இராது. அவன் அந்த விளக்கை ஏற்றி எரியும்படி வைத்திருப்பது கடினம்.

30th April 1960] [Sri K. Anbazhagan]

அவன் கையில் ஏற்றிக்கொடுப்பவர்கள் குருடனை விட உண்மையிலே தெளிவு இல்லாதவர்களாக இருக்கவேண்டும். அல்லது அவனை வஞ்சிப்பவர்களாக இருக்க வேண்டும். இந்த சூழ்நிலையில் தமிழர்களைக் குருடர்களாக்கி, மைல் கற்களை விளக்காக்கி "இந்தியை" வெளிச்சமாக்கி வடநாட்டார்களுக்கு நாம் பயன்படுகின்ற நிலைமை இருக்கத்தான்வேண்டும் என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். ஒரு வேளை அமைச்சர் அவர்கள் இன்றைய தினம் இருக்கும் தன் கட்சி நிலைமைக்கு ஏற்ப இவ்வாறு விளக்கி உதாரணம் தந்திருக்க வேண்டும். ஆனால், நிலைமை என்ன? அமைச்சர் அவர்கள் மற்றொரு இடத்தில் எண்களை எழுதும்போது இந்தி எண்களை எழுதுவதைக் கண்டிக்கிறோம் என்று தெரிவித்தார்கள். அதை வரவேற்கிறேன். இந்தி எண்ணைக் கண்டித்தவர்கள் எழுத்தைக் கண்டிக்காமல் இருப்பது எந்த விதத்தில் பொருத்தமாகும்?

SRI A. VEDARATHNAM: இந்த எண் சம்பந்தமான பிரச்னை இந்த அவையிலே வந்தபொழுது கனம் அமைச்சர் அவர்கள் அகில உலக எண்கள் தான் எல்லா இடங்களிலும் பயன் படுத்தப்படவேண்டும் என்று நம்முடைய அரசியல் நிர்ணய சபை தீர்மானித்திருக்கிறது அதைத்தான் பயன்படுத்த வேண்டும் என்று குறிப்பிட்டார்களே? அதை மீண்டும் இங்கே கிளப்புவது சரியா?

MR. SPEAKER: அபிப்பிராயத்தைச் சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN: அமைச்சர் அவர்களே அரசியல் சட்டத்தில் இடம்பெற்றிருக்கிறது என்பதை முன்னரே சொன்னார்கள். அதைக் குறித்தும் இப்பொழுது விவாதிப்பது தவறாகாது. அது குறித்து மாறுபாடு இருந்தாலும், இல்லாவிட்டாலும், நான் விளக்க விரும்புவது எந்த வடிவத்திலும், மைல் கல்லில் இந்தி தேவையில்லை என்பதுதான். மேலும் கல்வி அமைச்சர் அவர்கள் எழுத்துத் துறையில் ஒரு சீர்திருத்தத்தை, மாற்றத்தை விரும்புவதாகத் தெரிவித்துள்ளார். இன்றும் வட நாட்டார் கையாளுகின்ற எழுத்துக்களைவிட்டு, ரோமன் எழுத்துக்களைப் பயன்படுத்தினால், அது எல்லோராலும் வரவேற்கத்தக்கதாக இருக்கும் என்று பேசியுள்ளார். நான் இந்தியை வரவேற்பவன் அல்ல. அது தேவையில்லை என்பதால் எதிர்ப்பவன்தான். என்றாலும், ரோமன் எழுத்துக்களைக் கையாள்வது பற்றி அமைச்சர் அவர்கள் சொன்ன கருத்தில் நான் தெரிவிக்க வேண்டிய ஒன்றைத் தெரிவிக்க விரும்புகிறேன். அந்தந்த மாநிலத்திலுள்ள மக்கள் தங்களுடைய தாய்மொழி எழுத்துக்களைத் தவிர பிறவகை எழுத்துக்களைக் கற்பது இயற்கை அல்ல. எனவே, தமிழைத் தாய்மொழியாகப் படிப்பவர்கள் தமிழ் எழுத்துக்களையே பயில்வார்கள். தெலுங்கு படிப்பவர்கள் அவர்களுக்குப் பழக்கமாக இருக்கிற அந்த எழுத்துக்களையே பயில வேண்டும். இந்தியைப் படிக்கின்ற இந்தி நாட்டு மக்கள்—வடநாட்டு மக்கள் அந்த இந்திக்குச் சொந்தமான தேவநாகரி எழுத்துக்களிலே படிப்பதிலே யாருக்கும் மாறுபாடு இருக்க

முடியாது. ஆனால், அன்னிய மொழியைப் படிக்க வேண்டிய அவசியம் உள்ளவர்கள் அவ்வாறு எண்ணுகிற மக்கள் அன்னிய மொழியின் எழுத்துக்களைக் கொண்டே படிக்க வேண்டிய நிலைமை இருப்பதால், படிக்க விரும்புகிறவர்களுக்கு அது கடின மாகின்றது. ரோமன் எழுத்துக்களைக் கொண்டே அன்னிய மொழிகளைப் படிக்கலாமெனில் அது எளிமையை உண்டாக்கும். உண்மையிலேயே ஆங்கிலம் படித்தவர்களுக்கு அந்த எழுத்து பயன்படுகிறது. அது உலகிலே வேறு பல மொழிகளுக்கும் பொது எழுத்தாக இருக்கும் காரணத்தினாலே இந்தி வழங்காத பகுதியில் வாழ்கின்ற மக்கள் இந்தி படிப்பதற்கும் அது பயன் படும். அதனால் தமிழ் மக்கள் சிறுவர்கள் தலையிலே ஏறியிருக்கும் சுமையும் ஓரளவு குறையும். மூன்று வகையான எழுத்துக்கள், வெவ்வேறு இனமொழி இலக்கணங்கள். மூன்று வகை உச்சரிப்புக்கள் இவைகளையெல்லாம் படிக்கிற, எழுதுகிற, கற்கிற தொல்லை சிறிது குறையும். அந்த வகையிலே ரோமன் எழுத்துக்களை வரவேற்கலாம். மைல் கல்லில் உள்ள எழுத்துக் கள் தொல்லையும் இதனால் குறையும். கும்பகோணம் என்று தமிழ் எழுத்துக்களில் ஒரு முறை, அடுத்து இந்தி எழுத்துக்களில் ஒரு முறை, அடுத்து ஆங்கில எழுத்துக்களில் ஒரு முறை எழுதாமல், ஆங்கில எழுத்துக்களிலேயே எழுதிவிட்டால் வட நாட்டுக்காரர்களுக்கும் புரியும் என்ற நிலைமை ஏற்பட்டு, அனாவசியமாக மைல் கற்களிலெல்லாம் இந்தி படிக்க வேண்டிய தொல்லையும் அந்த இந்தி எழுத்துக்களின் தொல்லையும், தமிழகத்தில் குறையும். தபால் கார்டுகளில் கூட இந்தி எழுத்துக் களிலே அச்சியற்றும் தொல்லையும், அந்தக் கோணல் எழுத்துக்கள் புரியாமல் நாட்டு மக்கள் திண்டாட வேண்டிய நிலைமையும் ஒழியும். எனவே அந்த வகையில் ரோமன் எழுத்திலேயே பெயர்ச் சொற்களையாவது இந்திக்கும் ஆங்கிலத் திற்கும் பொதுவாக—எழுதிவிடலாம் என்பதை எண்ணிப் பார்த்தால், இது சிக்கனத்திற்கும் துணை ஆகிறது. அதேபோல், இந்தி தெரிந்தவர்கள், ரோமன் எழுத்துக்கள் தெரிந்தால், இந்தியிலேயே அவர்கள் படிக்கும் பலனைப் பெற்றதாகும் என்று எண்ணக்கூடிய நிலை ஏற்படும். எனவே அந்த வகையில், ரோமன் எழுத்துக்களை ஏற்குமாறு வற்புறுத்த வேண்டும் என்று தெரிவிக்கிறேன். இதை ஒட்டியே நண்பர் வேதரத்தினம் அவர்கள் ஒரு ஒழுங்குப் பிரச்னையைக் கிளப்பி, அரசியல் சட்டத்திலே அராபிக் எண் ஏற்கெனவே ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது என்றார்கள். ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் அளவுக்குத்தான் உரிமையா அல்லது; இனியும் நியாயமான உரிமையை வற்புறுத்தி ஒத்துக்கொள்ளும்படிச் செய்வதா என்பதை அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும். இந்தி எண்ணைப் பொறுத்தவரை அதை வற்புறுத்த இடமில்லா ததை ஒப்புக் கொண்டுள்ளார்கள். ஆனால் ஒப்புக்கொண்டுள்ள தற்கு மாறாகப் பல சந்தர்ப்பங்களிலே நடக்கிறார்கள். அந்த வகையில் நடப்பதால் இந்த எண்களை மட்டுமின்றி எழுத்துக் களைப் புகுத்துவதும் தவறுதான் என்பதை எடுத்துக் காட்ட வேண்டும். அரசியல் சட்டத்திலே இந்தி எழுத்தை ஒப்புக்கொண்

30th April 1960] [Sri K. Anbazhagan]

டிருக்கலாகம்; ஆனாலும் அதை மறுத்து எடுத்து உரைத்து, இந்தி வழங்காத பகுதிகட்கு ரோமன் எழுத்துக்களை ஒப்புக்கொள்ளச் செய்தால்தான் நாட்டிலே சில இடத்திலாவது இந்தியை எழுதச் சம்மதிப்போம்; இல்லாவிட்டால், அதற்கு இடம் இல்லை என்று தெரிவிக்க நம் மாநில கல்வி அமைச்சர் அவர்கள் முன்வர வேண்டும்; அதற்குரிய, கட்டம் சூழ்நிலை இருக்கிறது, தமிழ் நாட்டிலேதான் தெளிவான கொள்கையும் இருக்கிறது. அது மட்டுமல்ல; இதற்காக அரசியல் சட்டத்தில் திருத்தம் தேவை யானால் அதையும்கூட வற்புறுத்திச் செய்யத் தயாராக வேண்டும்.

இன்று ஜனாதிபதி அவர்களின் அறிக்கை வெளிவந்திருக்கிறது. அது நம்மையும் பாதிக்கக்கூடியது என்ற காரணத்தினால், அது குறித்து தெரிவிக்க விரும்புகிறேன். ஆங்கிலம் இந்தியோடு இணைந்திருப்பதற்கு அவர்கள் அனுமதித்திருக்கிறார்கள்; என்றாலும், இந்தியை வளப்படுத்தவும் பரவச் செய்யவும் செயலில் ஈடுபடவேண்டும் என்று கூறுகிறார்கள். ஜனாதிபதி அறிக்கையில் நிலைமை எப்படி யிருந்தாலும், இந்திக்குச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யுங்கள், அதனை ஊக்குவியுங்கள் அதற்கான வழிவகைகளைக் காணுங்கள் என்று ஊக்குவிக்கிறார் கள். ஏற்கனவே இந்தியைப் பொருத்தவரை, அதற்கு அதிகச் சலுகை கொடுத்திருக்கிறார்கள்; பிறமொழிப் பகுதியில் அளவுக்கு மீறித் திணிக்கிறார்கள்; அளவுக்கு மீறி வற்புறுத்துகிறார்கள். அந்த கட்டம் இருக்கும் போது, ஜனாதிபதி அறிக்கை மேலும் அதை ஊக்குவிப்பதாக இருக்கக் காண்கிறோம். எனவே அப்படிப்பட்ட நிலையை இந்தக் குடியரசுத் தலைவர் அறிக்கை தந்திருந்தால், கல்வியமைச்சர் அவர்கள், தமிழுக்காக, தமிழ் நாட்டுக்காக, தமிழ் மக்களுக்காக, இன்றைய போக்கையும் நோக்கையும் மாற்றியமைக்கும் அளவில் மத்திய சர்க்காருக்கு இதைக் கண்டித்து எடுத்துச்சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அண்மையில் பண்டித பந்த் அவர்கள் பாராளுமன்றத்தில் பதிலளிக்கையில், சென்னை சர்க்காரிலிருந்து மைல் கல்லில் இந்தி எழுதுவது குறித்து மறுப்பு ஏதும் வரவில்லை யென்று தெரிவித்திருக்கிறார்கள். அதற்கு ஏதும் மறுப்புச் சொல்லவில்லை என்ற காரணத்தால், தென்னாட்டில் இந்திக்கு வழி திறந்திருக்கிறது என்ற எண்ணம் டில்லி சர்க்காருக்கு ஏற்பட வேண்டாம். அதை மறுத்து உரைக்க, இந்தி தமிழ் நாட்டிற்குத் தேவையில்லை, மைல் கல்லுக்கு இந்தி தேவையில்லை என்று எடுத்துச் சொல்லுவதற்கு அமைச்சர் எண்ணிப் பார்த்து, வழி முறை கண்டாக வேண்டும்.

அது மட்டுமல்ல. மற்றொன்றும் தெரிவிக்க விரும்புகிறேன். தபால் கார்டிலே, மணியார்டர் பாரத்திலே பணவிடைத் தாளிலே, இந்தியில் அச்சிட்டுள்ளனரேயன்றி தமிழிலே அச்சியற்றத் தொடங்க வேண்டும்; கல்வியமைச்சர் அச்சியற்றும் பொறுப்பை ஏற்க வேண்டும். இதை நான் சொல்வது ஏனென் றால், ஏற்கெனவே மத்திய சர்க்காரில் உள்ள அஞ்சல்துறை மந்திரி

[Sri K. Anbazhagan] [30th April 1960

தெரிவித்தார், " அஞ்சல்துறைத்தாள்களை தமிழிலே அச்சியற்று வது ; என்பது மாநில சர்க்கார் விரும்பினுல் மேற்கொள்ளலாம் ; அவர்கள் அந்தக் கடமையைச் செய்யலாம் " என்று. மத்திய சர்க்காருக்கு அந்தக் கடமையைச் செய்ய வாய்ப்பும் வசதியும் இல்லை என்றும் தெரிவித்தார்கள். எனவே, அதற்கு ஆகக்கூடிய செலவைப் பொருட்படுத்தாமல்—முதல் அமைச்சரவர்களுக்கு தமிழ் தவிர பிற மொழிகளில் அதிக ஆர்வம் இருக்காது என்று கருதுகிறேன்—சென்னை முதல் அமைச்சர் இவையெல்லாம் தமிழிலே அச்சியற்றும் செலவைக்கூட, சென்னை மாநில அரசாங் கமே ஏற்றுக்கொள்ளுமென்று தெரிவித்தாவது, அந்த முறை யைக் கைக்கொள்ள வேண்டிக்கொள்ளுகிறேன்.

அடுத்து தெரிவிக்க விரும்புவது—தமிழ் மொழிவளர்ச்சியிலே ஆசிரியர்கள் அதிக ஆர்வம் கொள்ள வேண்டுமானுல்,—கல்வி மானியத்தின் மீது பேசும்போதே தெரிவித்தேன்—தமிழிலே வல்லவர்களாக இருக்கும், பேராசிரியர்கள் கல்லூரி முதல்வர் களாக நியமிக்கப்படும் நிலை நம் மாநிலத்திலே ஏற்படவேண்டும். சில இடங்களிலே, சம்ஸ்க்ருத ஆசிரியர்கள், உருது ஆசிரியர்கள் கூடக் கல்லூரி முதல்வராக இருக்கிருர்கள். ஆனுல், தமிழ்ப் பேராசிரியர்கள் கல்லூரி முதல்வர்களாக இருக்கும் நிலை சென்னை மாநிலத்தில் இல்லை. எனவே, தமிழ் ஆட்சி மொழியாக —போதனுமொழியாக வேண்டுமானுல், அந்த வகையிலும் வழி செய்யவேண்டும். கல்வி மானியத்தின் மீது பேசும்போது இன்னொரு கருத்தையும் தெரிவித்தேன்—மத்திய சர்க்கார் அமைத் துள்ள பல்கலைக் கழக மானியக் குழு, கல்லூரி ஆசிரியர்களின் ஊதியத்தை உயர்த்தி உதவி செய்வதற்காக ஓரளவு தங்கள் நிதியிலிருந்து ஒதுக்குவதற்குத் தயாராக இருந்தும், நம் கல்வி யமைச்சர், நிதியமைச்சராகவும் இருக்கும் காரணத்தால் போலும்—போதுமான பணவசதியில்லை யென்ற காரணத்தைக் கூறி—கல்லூரி ஆசிரியர்களின் சம்பளத்தை உயர்த்துவதற்கு இதுவரை வழிவகை செய்யவில்லை. ஏறத்தாழ ஐந்தாறு ஆண்டு களாக வளர்ந்துவரும் குறை இது. மத்திய சர்க்கார் மானியத் தொகையிலிருந்து பல்கலைக் கழக மானியக் குழு ஆசிரியர்கட்கு உயர்த்தப்படும் சம்பள விகிதத்தில் 50 சதவிகிதம் தருகிறேன் என்று சொல்லியும், மற்ருெரு 50 சதவிகிதத்தை சென்னை சர்க்கார் ஏற்றுக்கொள்ளுவது மூலமாக அவர்களுக்குக் கிடைக் கக்கூடிய உதவித்தொகை கிடைக்கும்படிச்செய்ய இதுவரை நாம் அனுமதிக்கவில்லை. அதை மாற்றியமைக்கவும், உடனடி யாக வழிவகை காணவும் வேண்டும்.

இந்த நேரத்திலே, மாநில அரசாங்கம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இப்பொழுது அக்கரை செலுத்தி வருகிறது. மூன்ருவது திட்டத்திற்கு நம் அரசாங்கம் கேட் டிருக்கும் தொகை குறைவு என்பது என் வாதம். மாநில சர்க்கார் மத்திய சர்க்காரிடம் கேட்டிருக்கும் தொகை . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: இன்னும் கேட்கவில்லை ; அந்த கட்டம் வரவில்லை.

30th April 1960]

* SRI K. ANBAZHAGAN: இதுவரை கேட்கவில்லை யென்று அமைச்சர் சொல்லுகிறார்கள். ஆனால், சட்டமன்றத்திலே பேசும்போது, இந்த அளவுதான் கேட்க முடியும் என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். நான் அவரை வற்புறுத்திக் கேட்டுக் கொள்வேன், திட்டத்திற்குத் தொகை கேட்கும் நேரத்திலே, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்குக் கிடைத்த பங்கு எவ்வளவு, நியாயமாகக் கிடைக்கவேண்டிய பங்கு எவ்வளவு, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நமக்குக் கிடைத்த பங்கு எவ்வளவு, நியாயமாகக் கிடைக்க வேண்டிய பங்கு எவ்வளவு, என்பதைத் கணக்கிட்டு அந்த அடிப்படையில் எண்ணிப்பார்க்கவேண்டும்; முதல் திட்டத்திலும், இரண்டாவது திட்டத்திலும் மத்திய சர்க்கார் தமது நேரடி நிர்வாகத்தில் மேற்கொண்டு செலவழித்த தொகை எவ்வளவு? மத்திய சர்க்கார் நேரடி செலவுத் தொகையில் ஒவ்வொரு மாநிலத்திற்கும் கிடைத்த தொகை எவ்வளவு, நமக்குக் கிடைத்த தொகை எவ்வளவு? மத்திய சர்க்கார் மேற்பார்வையில் செலவழித்த மொத்த தொகையில் நம் மாநிலத்திலே செலவழித்த பங்கு எவ்வளவு என்றும் ஒப்பிட்டுப் பார்த்தால், பிற மாநிலங்களுக்குக் கிடைத்த அளவு நமக்குக் கிடைக்கவில்லை என்பது தெளிவாகும். ரயில்வே போக்குவரத்துத் துறையானாலும் சரி, இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்படுத்தும் திட்டமானாலும் சரி, கனரக இயந்திர தொழிற்சாலையானாலும் சரி, நமக்குக் கிடைத்திருக்க வேண்டிய பங்கு கிடைத்திருக்கிறதா என்று எண்ணிப் பார்த்தால், மிகவும் குறைவு என்பது தெரியும். மற்றொன்று: நம் நிதியமைச்சரவர்கள், எண்ணிப் பார்க்க வேண்டும் என்பதற்காக சொல்லுகிறேன், பிற மாகாணங்களைவிட நம் சென்னை மாநில மக்களின் சராசரி வருமானம் மிகக் குறைவு என்பதை நிதியமைச்சர் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே தெரிவித்தார்கள். (கனம் நிதி அமைச்சர் அவர்கள், கனம் முதல் அமைச்சருடன் கலந்தாலோசித்துக் கொண்டிருந்தார்கள்) நான் அமைச்சரவர்கள் இதைக் கவனிக்க வேண்டும் என்றுதான் பேசுகிறேன். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்: நான் மொத்தமாகக் கலந்து ஆலோசித்துக் கொண்டிருக்கிறேன்).

அமைச்சரவர்கள் நான் பேசும்போது டைம் லிமிட்டு தேவை என்கிறார்கள். மனமார வரவேற்கிறேன். அப்படி ஏற்படுத்தப் பட்ட நேரத்தின் அளவிலேயே அவசியம் உள்ளவற்றைத் தெரிவிக்கிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே, அமைச்சர் பங்கு கேட்கும்போது, சராசரி வருமானம் நம் தமிழ் நாட்டிலே குறைவு என்றும், பிற மாநிலங்களிலே அதிகம் என்றும் தெரிவித்து, சராசரி வருமானம் எந்த அளவுக்குக் குறைந்திருக்கிறதோ அந்த அடிப்படையில், அதை எண்ணிப் பார்த்து, திட்டத்திற்கு அதிக தொகையும் உதவியும் அளிக்கும்படிக் கேட்கவேண்டும். மத்திய சர்க்கார், மிகப் பெரிய அணைக் கட்டுத் திட்டங்களை வடநாட்டு மாநிலங்களில் நிறைவேற்றும் வாய்ப்பு—வட நாட்டுக்கு உள்ளது.

[30th April 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றி இன்னும் மத்திய சர்க்காருக்கு தெரிவிக்கும் கட்டம் வரவில்லை; இப்பொழுது ஒரு கமிட்டி ஆலோசனை செய்துக் கொண்டிருக்கிறது; ஆலோசனை பண்ணிய பிறகு, இந்த சட்டசபையிலே அதைப் பற்றி விவாதம் செய்ய வேண்டுமா என்பதைப் பற்றி யோசிக்க வேண்டும். ஆகையினுல், மூன்ருவது திட்டத்தில் நாம் என்ன பண்ண வேண்டும் என்று அவர்கள் தலைவர் மூலமாக அந்தக் குழுவில் ஆலோசனை சொல்லச் செய்யலாம்.

* SRI K. ANBAZHAGAN: அமைச்சரவர்கள் சட்டமன்ற ஆலோசனைக் குழுவோடு கலந்து பேசுகிருர்கள் என்று தெரிவிக்கிருர்கள். வரவேற்கிறேன்; பாராட்டுகிறேன். ஆனுல், பத்திரிகைகளுக்கு மட்டும் அவ்வப்பொழுது, அமைச்சர் திட்டம்பற்றிச் செய்திகள் தந்துகொண்டிருக்கிருர்கள்; அமைச்சர் ஸ்டேட்மெண்டு பல பத்திரிகைகளில் வந்திருக்கிறது.

MR. SPEAKER: மிஸ்டர் அன்பழகன், ஒரு நிமிஷம்.

Hon. Members will see that when the Appropriation Bills are considered by the House it will not be permitted to raise discussion on taxation proposals. The discussion can cover any matter of public importance or of administrative policy implied in the grants and the expenditure charged on the Consolidated Fund in so far as the same is permitted in the Constitution and the Rules of procedure, questions affecting economy, improvements in administration, scrutiny and maintenance of proper accounts and reappropriation, in fact, general matters in respect of which the House would like to point out defects or give direction to the administration for improving its tone to the services to the people, better efficiency and better economy . . . . அதைத்தான் அடிப்படையாக வைத்துக்கொண்டு பேச வேண்டும்; எல்லாம் பேச சந்தர்ப்பம் கொடுக்க முடியாது; இதை மனதில் வைத்துக்கொண்டு பேசவேண்டும்.

SRI T. S. RAMASWAMI: May I know the authority, Sir—

SRI K. ANBAZHAGAN: தலைவர் அவர்களுக்கு நன்றி . .

MR. SPEAKER: That is the Speaker's authority. It may be some authority. I need not tell what au t it is. It is Speaker's authority.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஸ்பீக்கர்ஸ் அதாரிடி.

* SRI K. ANBAZHAGAN: மன்றத் தலைவர் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றி. மக்களுடைய பொருளாதார வளர்ச்சிக்கான வழிவகைப்பற்றி—திட்டங்களைப்பற்றிப் பேசலாம் என்ற கருத்தைத் தெரிவிக்கிருர்கள். எனவே, மக்களுடைய வாழ்க்கை வசதிக்காக மூன்ருவது திட்டத்திலே . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: எந்தெந்த டிமாண்டு வந்திருக்கிறதோ, அதில் பேசியிருக்கிறேம்; இப்பொழுது மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம், அடுத்த 1961–62 பட்ஜெட்டில் தான் வரும். அதற்காகத்தான், ஸ்பீக்கர் அவர்கள் நாஸுக்காகச் சொன்ஞர்கள். அதில் குதர்க்கம் சொல்லி, தொடர்ந்து பேசுவது பிரயோஜனம் இல்லை.

30th April 1960]

SRI K. ANBAZHAGAN: மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை பின்னுல் விவாதிப்பதற்கு இடம் இருப்பதால் நான் இந்த அளவுக்கு, இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். அதைப் பற்றி சொல்ல விரும்பியதின் காரணமே பலவற்றிற்குப் பதிலளிக்கும் போதும் அமைச்சர்கள் இவ்வாறு க்ரான்டுக்களின் மீது பேசும்போதும், கேட்கப்பட்ட திட்டங்கள் எல்லாம் பலவும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படும் என்று தெரிவித்தார்கள். காற்றில் பட்டத்தை விட்டு விட்டு கயிற்றை இழுப்பது போல இந்த திட்டத்தோடு ஒட்டிய பல பிரச்னேகளேப் பற்றி விவாதிக்க வேண்டியது அவசியமிருப் பினும்—இப்பொழுது பேசுவதில் அவர்களுக்கு என்ன கஷ்டம் இருக்குமோ, என்ன கசப்போ என்று எனக்குத் தெரியாது—அதைப் பேச வேண்டாம் என்று அமைச்சர் கூறுகிருர். எனினும் இந்த விவாதத்தை இந்த அளவோடு நிறுத்திக் கொள்ளுகிறேன். 10-0 a.m.

இப்பொழுது அளிக்கப்பட்ட மானியம் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். மானியங்கள் பல்வேறு கோணங்களிலிருந்து பார்த்துக் கொடுக்கப்படுகிறது. சென்னே மாநிலத்திலுள்ள பல்வேறு உள்ளாட்சி மன்றங்கள் உதவித்தொகை கேட்கின்றன. உள்ளாட்சி மன்றங்களில் சென்னே மாநகரில் உள்ளது மிகமிக முக்கியத்துவம் பெறும் மன்றமாகும். இந்த நகரசபைக்கு என்னென்ன குறைகள் இருக்கின்றன என்பதை இந்த அரசாங்கத் திற்கு ஏழெட்டு ஆண்டுகளாகவே தெரிவித்து வந்திருக்கிருர்கள். அப்படி தெரிவித்திருந்தும் கூட, அரசாங்கத்தால் அவைகள் நிவர்த்திக்கப்படவில்லே. இப்பொழுது ஏறத்தாழ பத்து மாதம் அல்லது ஒரு ஆண்டு காலமாக திராவிட முன்னேற்றக் கழகம் நகர சபை ஆட்சிப் பொறுப்பில் இருந்த போதிலும் அவர்களும் இந்த அரசாங்கத்தின் உதவியை வேண்டிக்கொண்டிருக்கிருர்கள். இன்னின்ன வகையில் உதவித் தொகையும் கடனும் கொடுத்தால் தான் வேலேகளேச் செம்மையாக நிறைவேற்ற முடியும் என்றும் விளக்கியுள்ளனர். ஆனுல் நமது நிதி அமைச்சராக இருப்பவர் அப்படிப்பட்ட உதவிகள் செய்வேன் என்று சொல்வதற்குப் பதிலாக மாநகராட்சி மன்றத்தில் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்ததற்குப் பின்னுல் நிர்வாகத்தில் குறை ஏற்பட்டு விட்டது, பெரும் நாற்றம் அடிக்கிறது என்று அவர் பேசியிருக்கிருர். ஒரு வேளே சாக்கடை நாற்றத்தையே கருதி அவ்வாறு குறிப்பிட்டிருக்கக்கூடும். நகர மன்ற நிர்வாகத் தில் இருக்கும் நாற்றம் என்று அவர் குறிப்பிடுவதாக இருந்தால் இது வரையில் நிர்வாகத்தில் என்ன என்ன குறை ஏற்பட்டது என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் ஆளும் கட்சித் தலேவராக இருக்கும் காரணத்தால் பொறுப்புடன் ஆராய்ந்து பார்த்து எந்தெந்த விதத்தில் பணி குறைபட்டிருக்கிறது என்றும் தெரிவிக்க முன்வர வேண்டும் என்று நான் அவருக்குத் கூற விரும்புகிறேன்.

1951-ம் ஆண்டிலிருந்து 1959-ம் ஆண்டு வரையில், ஆக இந்த எட்டு ஆண்டு காலமும் அதற்கு முன்னரும் சென்னே நகரசபை நிர்வாகம் காங்கிரஸ் கட்சியின் கையில் இருந்தது. இந்த எட்டு ஆண்டு காலத்தில் அதனுடைய லோகல் பண்டு ஆடிட்

ரிப்போர்ட்டில் பல குறைகளை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அப்படி ஏறத்தாழ 4,800 குற்றங்குறைகளைக் காட்டியிருக் கிறார்கள். இந்த 4,800 குறைகளில் நாலைந்து ஆயிரம் ரூபாய் பெறுமானத்திலிருந்து, பத்து அல்லது இருபது லட்சம் ரூபாய் வரை வசூலிக்கப்பட வேண்டியவர்களிடமிருந்து வசூல் செய்யப் படாமல் விட்டதால் ஏறத்தாழ கோடிக்கணக்கான ரூபாய் காங்கிரஸ் கட்சி இருந்த காலத்தில் சென்னை நகர மன்றத்திற்கு கிடைக்க வேண்டிய தொகை நிர்வாகக் குறைவால் கிடைக்காமல் போயிருக்கிறது. காங்கிரஸ் கட்சி அதிகாரத்தில் இருந்த போது காங்கிரஸ் அமைச்சர்கள் மூன்று ஆண்டுக்கு ஒரு முறையாவது அதன் கணக்கை பரிசீலனை செய்து கண்டித் திருந்தால் இந்தத் தொகை ஏறத்தாழ ஐந்து கோடி ரூபாய்க்கு மேல் சென்னை நகர சபைக்கு வருமானம் கிடைத்திருக்கக் கூடும். குற்றம் என்று காட்டப்பட்டவற்றின் கூடுதல் தொகை என்னிடம் இல்லை. ஆனால் இதன் விவரங்கள் என்னிடம் இருக்கிறது. புள்ளி போட்டுப் பார்த்தால் ஒவ்வொன்றும் நாலைந்து லட்ச ரூபாய் இருக்கலாம் என்று தோன்றுகிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்பொழுது ஐந்து கோடி என்று சொல்கிறார். இதற்கு மேல் இருபது கோடி என்று கூட அவர் சொல்வார்.

* SRI K. ANBAZHAGAN: கனம் அமைச்சர் அவர்கள் இருபது கோடி கூடச் சொல்லலாம் என்று தெரிவிக்கிறார். அவரே அப்படிக் குறிப்பிடும்போது நானும் அவ்வாறே குறிப் பிடுவேன். ஆகவே ஏறத்தாழ அந்தக் கணக்கின்படி குற்றங் குறையில் பாழான தொகை பலப் பல லட்சம் என்று தெரிவிக் கலாம். இதைக் கேட்க கனம் அமைச்சருக்கு வேடிக்கையாக இருக்கலாம். ஆனால் அது எனக்கு மிகவும் வேதனையாக இருக் கிறது. காரணம் என்னவென்றால் இவ்வளவு பணம் காங்கிரஸ் கட்சி ஆட்சியில் ஊழலுக்கு உள்ளாகி இருப்பதைக் குறித்து ஒரு கண்டனத்தைக் கூட தெரிவிக்காத கனம் அமைச்சர் அவர்கள் மறுபடியும் காங்கிரஸ் நகர சபை ஆட்சிபீடத்தில் ஏற வேண்டுமென்று ஆசைப்படுகிறார். மாறாக ஆட்சிக்கு வந்த பத்து மாதத்திற்குள்ளாக ஒரு மாற்றுக் கட்சியினர் மீது ஏதாவது ஒரு குறைபாட்டை சுமத்திவிட வேண்டுமென்று பேசுவது எந்த அளவுக்கு நியாயமாகும் என்று கேட்க விரும்பு கிறேன்.

மற்றொன்று சுகாதார இலாகா பொறுப்புள்ள அமைச்சர் மாணிக்க வேலு அவர்கள் சில நாட்களுக்கு முன் இங்கு பேசும் போது, கொசுக்கடி ஏற்கெனவே வளர்ந்திருந்தது என்றும் ஒரு மாதமாக நகராண்மைக் கழகத்தார் செய்த பணிகளால் அது மிகவும் குறைந்திருக்கிறது என்றும் தெரிவித்திருக்கிறார். கொசுக் கடி வளர்ந்திருக்கிறது அல்லது சாக்கடை நாற்றம் பெருகி இருக்கிறது என்றாலும் அது இந்தப் பத்து மாதத்திற்குள் அப்படிப்பட்ட நிலையை ஏற்படுத்தியிருக்க முடியாது. பத்து மாதத்திற்குள் எந்த அளவும் இந்தக் கேடுகள் வளர்ந்துவிட

30th April 1960] [Sri K. Anbazhagan]

வில்லை. பத்து மாத காலத்தில் வெளியாவது ஒன்றே ஒன்று தான். அதுவும் தடைபடுத்தப்படுகிறது வேறுகாரணங்களால். இந்த ஊழல் இந்தப் பத்து ஆண்டுகால ஆட்சியின் விளைவாகும். இதன் பொறுப்பு ஏற்கெனவே யாருக்கு இருந்தாலும், இனி யாவது கூட்டுப் பொறுப்பு ஏற்பட்டு இருக்கிறது என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் உணர்ந்து, இனிமேலாவது அவர் களுக்குத் தக்க உதவி செய்ய மனமாற முன்வரவேண்டும். அடுத்து, இந்த விஷயத்தில் அரசாங்க நிர்வாகத்தில் ஊழல் இருக்கிறதா என்று சொல்லுங்கள் என்று கேட்கிறார்கள். மீன் இலாக்காவைப்பற்றி நான் ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறேன். அதைப்பற்றி மறுமுறையும் நான் குறிப்பிட நேருகிறது. அந்த இலாகாவில் ஊழல் வளர்ந்திருக்கிறது. அதில் அண்மைக் காலத்தில் தூத்துக்குடியில், ஏறத்தாழ தினம் ஒரு திருட்டு வீதம் சங்குகளும், முத்துச் சிப்பிகளும் திருட்டுப் போய்க் கொண்டிருக்கின்றன. அங்கேயுள்ள அதிகாரி ஒருவர், அண்மைக் காலத்தில் பொறுப்பேற்றவர் அதைக் கண்டுபிடித்து அரசாங் கத்திடம் தெரிவித்திருக்கிறார். ஆனால் அவற்றிற்கான முழு நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. அப்படி முழு நடவடிக்கையும் எடுக்க வேண்டும் என்று நான் கேட்பதற்குக் காரணம் அவற்றை உடனடியாகத் தடுத்து நிறுத்துவதனால்தான் அரசாங்கத்தின் பொருள் பாழாகாமல் தடுக்க முடியும். அப்படி அரசாங்கத்தினுடைய பொருள் பாழாகாமல் தடுத்து நிறுத்து வதோடு மட்டுமல்ல அதற்குக் காரணமாக, உடந்தையாக உள்ளவர்கள் தண்டிக்கப்பட வேண்டும். நிர்வாக தலைவராக இருப்பவர், அவர் மீது அல்லது இலாகா மீது புகார் பேசப்படுகிறது என்றால் அதன் காரணத்தை அறிந்து அதை விலக்குவதற்குப் பதிலாக, யார் யார் புகார் சொல்லி இருப்பார்கள் என்று எதிர் பார்த்து, அந்த இலாகாவிலுள்ள மற்ற அலுவலாளர் மீது கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ள முயற்சிக்கிறார். சாமான்யமான வேலையில் இருப்பவர் களைக் கூடத் தண்டிக்க ஆசைப்படுகிறார். யார் பொறுப்புடன் பணியாற்றுகிறார்களோ அப்படிப் பணியாற்றுகிறவர்களை பொறுப்பிலிருந்து விலக்கவும் முயற்சிக்கிறார் என்பதை நான் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அந்த இலாகாவில் ஏறத்தாழ பத்து ஆண்டுகாலமாக ஒரே ஒரு அதிகாரி அசிஸ்டென்ட் டைரக்டராக இருந்தவர் ஒரு முறை 85 ஆயிரம் ரூபாயும், மறு முறை ஒரு லட்சம் ரூபாயும் அரசாங் கத்திற்குரிய தொகையை பேரத்தில் இழந்திருக்கிறார். இன்னொரு முறை அவரே ஐந்து ஆயிரம் ரூபாய் அளவு கூட்டுறவு பணத்தை இழந்திருக்கிறார். இன்னொரு முறை அவரையே சங்குகள் திருட்டுப் போனதையொட்டி சம்பந்தப்படுத்தப்படக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. இப்படி ஒரு அதிகாரியின் மீது தொடர்ச்சி யான குறைகள் இருக்குமானால் அரசாங்கம் அப்படிப்பட்ட அதிகாரியின் மீது தக்க நடவடிக்கை எடுப்பதன் மூலம் அந்த இலாகாவை சீர்திருத்தி அமைக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். கனம் அமைச்சர் அவர்கள், இந்தக் குறைகளைச் சொல்லுகிற நேரத்தில், இது எதிர் கட்சியினர்

[Sri K. Anbazhagan] [30th April 1960

வாதம் என்று எண்ணுவதற்குப் பதிலாக அவைகள் எல்லாம் நிர்வாகத்தில் சீர்த்திருத்தப்படவேண்டியவை என்று எண்ணிப் பார்த்து அதற்குத் தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

SRI S. NAGARAJA MONIGAR: ஸார், ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன். நாட்டிற்கு ஹிந்தி வரவேண்டும் என்று சொன்னால் அதை வரவேற்பதாக இல்லே. இந்த நாட்டிற்கு தமிழ்தான் வர வேண்டும். ஹிந்தி தான் வர வேண்டும் என்று நினைப்பவனும் அதை வரவேற்பவனும் நான் அல்ல. தமிழ் போதனை மொழியாக வரப் போகிறது என்று சொன்னாலும் அதை எதிர்க்கிறார்கள். அப்படியானால் திராவிட நாட்டினுடைய பொது மொழி என்ன என்று எனக்குத் தெரியவில்லே. ஒரு வேளை திராவிட நாட்டிற்கு கன்னடமோ அல்லது தெலுங்கோ வரப்போகிறது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதுவும் வருவதாக இல்லே. ஆகவே, திராவிட நாட்டிற்கு பொது மொழி என்ன என்பதைத் தெரிந்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. வேறு ஏதாவது வந்து விடுமோ என்ற பயம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, திராவிட நாட்டின் பொது மொழி என்ன என்பதைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

MR. SPEAKER: Now I must tell hon. Members that I must impose a time limit. I would like to have a list of Members who want to speak on the Bill so that I may fix the time limit. Under Rule 80 of the Assembly Rules I have the authority to fix the time limit.

THE HON. SRI C. SUBRAMANIAM: Yesterday we allotted one hour for this Bill and then it was said we may take 1½ hours and finish the Bill by about 11-30. It was only on that decision that I have arranged my other programme for the day. If they had said that they would go on with the discussion of this Bill for four hours, I would have adjusted my programme accordingly. I wanted to be relieved at 11 and it was agreed to by them, and on that basis I had accepted another programme. Therefore we must adjust the discussion accordingly. I would require half an hour for replying to the discussion. There is no use in going on repeating the same points already made. I have to reply to them and in that way we can go on indefinitely reviewing what was already said and replied to. If however some new points are raised, I shall answer them.

MR. SPEAKER: Is it agreed that the House will relieve the Hon. the Finance Minister at 11-30? In that case I have to fix a time limit of ten minutes for each hon. Member. I would ask the hon. Member Sri Anbazhagan to finish his speech.

SRI K. ANBAZHAGAN: I have finished, Sir.

MR. SPEAKER: In that case I would allow ten minutes each to all the leaders of parties. I would request the leaders of parties to ask their members not to intervene in the Debate.

30th April 1960]

SRI T. S. RAMASWAMI: Is it a decision of the Business Advisory Committee, Sir?

MR. SPEAKER: Yesterday it was agreed by leaders of parties that they would relieve the Hon. the Leader of the House at 11 a.m.

SRI T. S. RAMASWAMI: If it is not a decision of the Business Advisory Committee, we would be limiting the powers of the House.

MR. SPEAKER: It was not, as I said, a decision of the Business Advisory Committee as such but it was a decision of the leaders of parties which is also binding.

SRI D. S. AUTHIMOOLAM: ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன் ஸார். இது ரொம்ப இம்பார்டெண்ட் மாட்டர். ஒவ்வொருவருக்கும் குறைவான டயத்தைக் கொடுத்திருக்கிறீர்களே, அப்படிக் குறைத்துக் கொடுத்தால் எல்லோராலும் பேச வேண்டியதை பேச முடியுமா? அப்படிக் குறைப்பது சரியா?

MR. SPEAKER: I can fix a time limit. Under rule 80 the Speaker may prescribe a time-limit for speeches on Bills or resolutions or amendments to Bills or resolutions or on adjournment motions under rule 42 or on any other matter under discussion in the House.

அந்த அதிகாரத்தை எனக்கு கொடுத்திருக்கிறீர்கள்.

I fix ten minutes for each Member.

SRI P. S. CHINNADURAI: கனம் சபா நாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சபையில் நடக்கக்கூடிய நடவடிக்கைகளை கவனித்து அதற்குப் பதில் சொல்லுவதற்குப் நேரம் இல்லை. அதைவிட வேறு முக்கியமான வேலை இருக்கிறது அதற்குப் போக வேண்டும் என்று விரும்புகிறார் என்றும் தெரியவருகிறது. அந்த நிலைமையில் இந்தச் சபையின் நடவடிக்கைகள் ஏன் விணுக்க வேண்டும். அவர் இல்லாமல் இந்த சபை நடக்க வேண்டியதில்லை. என்னைப் பொறுத்த வரையில் நான் இந்த விவாதத்தில் கலந்து கொள்ளாமல் இருப்பதுதான் மேல் என்று தோன்றுகிறது, அவருக்குப் பதிலளிக்க நேரம் கொடுக்க வேண்டும் என்பதன் பொருட்டு. ஆகவே, அந்த முறையில் கனம் நிதியமைச்சர் அவர்களுக்கு நான் துணை புரிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, நானுகை செய்து கொண்ட முடிவு அல்ல இது. எல்லா கட்சித் தலைவர்களையும் கலந்து கொண்டுதான் நேற்று இப்படிப் பட்ட ஒரு முடிவுக்கு வரப்பட்டது. அந்த முடிவை மாற்றுவதற்கு எனக்கு ஆட்சேபணை இல்லை. ஒரு மணி வரையில் உட்கார வேண்டுமானுலும் எனக்கு உட்காருவதற்கு சம்மதம் தான். நேற்று ஒரு மணி நேரம் போதும் என்று சொன்னதால் தான் இவ்விதம் சொன்னேன். என்னைப் பொறுத்த வரையில் $1\frac{1}{2}$ மணி வரையில் கூட உட்கார்ந்து விவாதிப்பதற்கு சம்மதம் தான்.

நேற்று எடுத்துக் கொண்ட முடிவு பைண்டிங் அல்ல. ஒரு மணி வரையில் உட்காருவதாக இருந்தால் அதற்கு எனக்கு ஆட்சேபணை இல்லை.

SRI C. N. ANNADURAI: தலைவர் அவர்களே, நேற்றைய தினம் நம்முடைய நிதியமைச்சர் அவர்களுக்கு வேறொரு அலுவல் இருக்கிறது என்பதைப் பற்றி பேசிய நேரத்தில், அவர் வேண்டுமானால், நாங்கள் பேசிக்கொண்டிருக்கிற நேரத்தில், தங்களுடைய அலுவலைக் கவனித்துக்கொண்டு, பிறகு பதில் அளித்துக் கொள்ளலாம் என்று பேசியிருக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: தயவு செய்து மன்னிக்க வேண்டும். முதலில் அது மாதிரி எடுத்துச் சொன்னார்கள். அப்பொழுது நான் பதில் சொல்ல முடியாது என்றதும், 11 மணிக்கு என்னை விட்டுவிட ஒப்புக் கொண்டார்கள். அதற்குப் பிறகு, இப்பொழுது ஒரு மணி நேரம் பேச வேண்டும் என்றால் எனக்கு ஆட்சேபணை இல்லை. வெளிநாட்டிலிருந்து வருகிறவராக இருந்தாலும், சட்டசபை இருப்பதால் வரமுடியவில்லை என்று தகவல் கொடுத்தனுப்பிவிடுகிறேன்.

SRI C. N. ANNADURAI: அந்த சங்கடத்தை தவிர்க்க, இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது. அந்த ஒரு மணி நேரத்தை கட்சித் தலைவர்களுக்கு என்று ஒதுக்கிவிட்டால் பிரச்னை தீர்ந்துவிடும்.

SRI P. S. CHINNADURAI: கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு உதவி செய்வதாக வாக்களித்து விட்டேன். அதிலிருந்து நான் வழுவ விரும்பவில்லை.

MR. SPEAKER: உதவி செய்வதில் இரண்டு விதம் இருக்கிறது. பேசாமல் இருப்பது ஒன்று. 10 நிமிஷத்தில் பேச்சை முடித்து விடுவது மற்றொன்று. இரண்டாவதை செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI: கனம் சபாநாயகர் அவர்களின் உத்தரவுக்கு கீழ்படிந்து விரைவில் முடித்துக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: உத்தரவு அல்ல, விருப்பம்.

SRI P. S. CHINNADURAI: கனம் சபா நாயகர் அவர்களே, நம்முடைய ராஜ்யத்தில் மின்சாரத்தை உபயோகிக்கின்ற விவசாயிகள் சமீபத்திலே கட்டணங்களைக் குறைக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்து சொண்டு வருகிறார்கள். இந்த விவசாயிகளுக்கு உண்மையிலேயே நிவாரணம் அளிக்க வேண்டியது சர்க்காரின் கடமையாகும். இந்த விஷயத்தைக் கவனித்து ஆவன செய்வதாக சென்ற கூட்டத்திலே இங்கே பேசுகிறபோது கனம் மின்சார இலாகா அமைச்சரவர்கள் வாக்குறுதி கொடுத்தார்கள் என்று நான் இங்கே நினைவு படுத்த விரும்புகிறேன். ஆனால் அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகக் கடந்த

30th April 1960] [Sri P. S. Chinnadurai]

இரண்டு மூன்று மாதக் காலத்திலே எந்த விதமான நடவடிக்கையையும் கனம் மின்சார அமைச்சரவர்கள் எடுத்துக்கொள்ளவில்லை என்பது மிகவும் வருந்தத் தக்கது என்று நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். கடந்த அக்டோபர் மாதத்திலேயிருந்து அதிகரிக்கப்பட்ட மின்சாரக் கட்டணத்தைத்தான் அவர்கள் செலுத்திக் கொண்டு வருகின்றார்கள். அடுத்த ஆண்டு முடிவுக்குள் கிட்டத்தட்ட ஒரு லட்சம் பம்பு செட்டுகள் நம்முடைய ராஜ்யத்தில் வேலை செய்து கொண்டிருக்கும். அந்த ஒரு லட்சம் பம்பு செட்டுக்களை உபயோகிக்கின்ற விவசாயிகள் அநேகமாக நடுத்தரமான நிலையில் உள்ள விவசாயிகள். அவர்களுக்கு உதவி புரிய வேண்டியது சர்க்காருடைய கடமையாகும். அப்படி உதவி செய்தால்தான், விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்குவதிலே அதிக நாட்டத்தைச் செலுத்த முடியும். அதிகரிக்கப்பட்ட மின்சாரச் செலவும் சேர்ந்து, ஒரு பெரும் சுமையாக அவர்களுக்கு இருந்து வருகிறது. இதனை நீக்குவதற்கு உரிய நடவடிக்கைகளை உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்து, பரம்பிக்குளம் திட்டம் சம்பந்தமாக கனம் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் வெளியிட்ட அறிக்கையிலே 2;4 லட்சம் ஏக்கரா பாசன வசதி பெறும் என்று இருக்கிறது. இதற்கு முன்னாலே வெளியிட்ட அறிக்கையிலே 2;5 லட்சம் ஏக்கரா என்று இருந்தது. இந்த புதிய அறிக்கை 10 ஆயிரம் ஏக்கரா குறைக்கப்படுமோ என்ற அச்சத்தை உண்டாக்கி இருக்கிறது. அது அச்சுப் பிழையாக இருந்தால் பெரிதும் மகிழ்ச்சி அடைவேன். அது உண்மையிலேயே 2;4 லட்சம் ஏக்கராவுக்குத்தான் பாசன வசதி ஏற்படும் என்று இருந்தால், எப்படியாவது அதிகரிப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும். அதற்கு உரிய முறைகளிலே கேரள சர்க்காரோடு பேச்சு வார்த்தை நடத்தி அதிகப்படியான பாசன வசதி செய்ய வாய்ப்பு இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன். அப்படிச் செய்வதற்கு இல்லாமல் 2.4 லட்சம் ஏக்கராதான் பாசன வசதி பெறும் என்ற நிலைமை இருக்குமானால் அந்தப் பிராந்தியங்களைப் பொறுத்தவரையிலே, 4 தாலூக்காக்களுக்கும் ஒரே மாதிரியான பாசன வசதியை செய்ய வேண்டும். குறைக்கப்படுகின்ற 10 ஆயிரம் ஏக்கராவும், ஒரு தாலுக்காவில், இரண்டு காலூக்காவில் என்று இல்லாமல், 4 தாலுகாழக்கும், சமமான முறையில், நியாயமான முறையில் குறைக்க வேண்டும் என்று நான் அராசங்கத்தை மிகவும் பணிவோடு வேண்டிக் கொள்ளுகிறேன். இதிலே அரசாங்கம் சற்று தாட்சண்யம் இல்லாமல் நடந்து கொள்ள வேண்டிய அவசியமெல்லாம் இருக்கலாம். மிகவும் நெருங்கியவர்கள், வேண்டியவர்கள் என்றெல்லாம் பார்க்காமல், எல்லோருக்கும் பொதுவாக நீதி வழங்குவது, நியாயம் வழங்குவது என்ற முறையில் காரியங்கள் செய்ய முன் வர வேண்டும் என்று மராமத்து இலாகா அமைச்சர் அவர்களுக்கும், குறிப்பாக நிதி அமைச்சர் அவர்களுக்கும் நான் வேண்டுகோள் விடுக்கிறேன்.

[Sri P. S. Chinnadurai] [30th April 1960

நீர்ப்பாசன திட்டங்களைப் பொருத்தவரையில், பல்லடம், சூலூர், திருப்பூர் பகுதிகளில், நிறைவேற்றப்பட வேண்டிய திட்டங்கள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. அவற்றை நிறைவேற்ற ஏற்பாடுகள் செய்ய வேண்டும். 10 லட்சம் ரூபாய் பெறுமான திட்டங்கள் நிறைவேற்றப் படாமல் தாமதப் பட்டு வருகின்றன. அவ்வாறு தாமதப்படுவதன் விளைவாக அங்கே இருக்கின்ற விவசாயிகள் மிகவும் கஷ்டப் படுகிறார்கள். சாதாரண குட்டைகளை சீர்திருத்தி அமைப்பதற்கு பெரிய இன்ஜினீயர்கள் தேவையில்லை. ஆங்காங்கேயுள்ள பஞ்சாயத்து போர்டுகளின் பொறுப்பிலே விட்டாலே செவ்வனே நடத்தி வைப்பார்கள். ஆகையினாலே அதனை இந்த ஆண்டிலேயே நடத்திவைக்க சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும்.

இறுதியாக, அமைச்சர்களுடைய சுற்றுப்பயணத்தைப்பற்றி இங்கே சொல்லப்பட்டது. மக்கள் குறைகளை அறிவதற்கு சுற்றுப்பயணம் செய்வது நல்ல நிர்வாகத்திற்கு தேவையானதும் கூட. ஆனால் சுற்றுப்பயணம் செய்வதற்கு முன்னால் அமைச்சர் கள் காங்கிரஸ் கமிட்டியை மட்டும் கலந்துகொள்வது என்ற முறை நல்ல முறை அல்ல. ஜனநாயகத்துக்கு ஏற்ற முறையும் அல்ல என்று சொல்ல விரும்புகிறேன். காங்கிரஸ் கமிட்டிகளைக் கலந்து கொண்டுதான் அமைச்சர்கள் வருவது, அவர்கள் திட்ட மிட்டபடி செல்வது என்ற முறையானது மக்கள் மத்தியிலே ஒரு வெறுப்பைத்தான் உண்டாக்கும். இன்னும் சொல்லப்போனால் கட்சி ரீதியாக மக்களைப் பிரித்துவிடுவதற்குக்கூட அது ஏதுவாக இருக்கும். கனம் உள்நாட்டு அமைச்சரவர்கள் ஒன்று கூறியதை இந்த நேரத்தில் சர்க்காரின் நினைவுக்குக் கொண்டுவர விரும்பு கிறேன். அவர்கள் ஒரு தடவை பல்லடத்திற்கு வர எதிர்ப்பு இருந்தது. உள்ளூர் காங்கிரஸ் கமிட்டிகூட எதிர்த்திருந்த நேரம். அதையும்கூட பொருட்படுத்தாமல் வந்தார்கள். அதற்கு நாங்கள் நன்றியுடையவர்களாக இருக்கின்றோம். அப் பொழுது அவர்கள், "எத்தனையோ விதமான பேதங்கள் இருக் கின்றன. தீண்டாமை இருக்கிறது. அரசியல் தீண்டாமை இருக்கிறது. இதனை நான் அறிவேன். சமுதாயத்துறையிலே இருக்கிற தீண்டாமையைக் காட்டிலும் அரசியல் தீண்டாமை கொடியது. இது சரியானது அல்ல" என்று சொன்னார்கள். அதைத்தான் நான் மற்ற அமைச்சர்களுக்கும் சிபார்சு செய்ய விரும்புகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள், இந்த ராஜ்யத் துக்கு தமிழ்நாடு என்று பெயர் வைப்பது சம்பந்தமாக நான் விடுத்த வேண்டுகோளுக்கு பதில் அளிக்கிறபோது, "இது எங்களுடைய இஷ்டப்படிதான் பெயரிடப்படாமல் இருக் கின்றது" என்று சொன்னார்கள். அவர்கள் எதனை நினைத்துக் கொண்டு சொன்னார்கள் என்று தெரியவில்லை. இதுதான் அவர் களுடை இஷ்டம் என்று இருக்குமானால், மக்களுடைய உணர்ச்சியை இவ்வளவு புறக்கணிப்பது நெடுங்காலம் நீடிக் காது என்று அவர்களுக்குச் சொல்லுவேன். மக்களுடைய உணர்ச்சிகளை மதிக்காமல், செறுக்குடன் நடந்து கொண்ட அரசாங்கங்கள் இருந்த இடம் தெரியாமல் தகர்ந்து விட்டன.

30th April 1960] [Sri P. S. Chinnadurai]

அன்றைக்கு இருமொழி பம்பாய் ராஜ்யத்தை அப்படியேதான் வைத்திருப்போம் என்று மத்திய அரசாங்கம் சொல்லிற்றே, என்ன ஆயிற்று ? மகாராஷ்டிரம், குஜராத் என்று பிரிந்து போகவில்லையா ? ஆகையினாலே, தமிழ்நாடு என்று பெயரிட மாட்டேன் என்று அமைச்சர் அவர்கள் எதை மனதிலே வைத்துக்கொண்டு சொன்னாலும், அது சரி அல்ல என்று எடுத்துக் கூற—அவருடைய சிஷ்யன் என்ற முறையிலே, அவருடன் கீழிருந்து அரசியல் பழகியவன் என்ற முறையிலே அவருடன் சேர்ந்து பழகியவன் என்ற முறையிலே—விரும்புகிறேன். தமிழ் நாடு என்று பெயர் வைப்பதன் மூலம் தமிழ் மக்களின் நல்லபிமானத்தைப் பெறுவதற்கு முன்வாருங்கள். இல்லையானால், வரலாற்றிலே வீழ்ந்த எத்தனையோ அரசுகளைக் காண்கிறோம். அந்த மாதிரியான நிலைமை தங்களுக்கு ஏற்படவேண்டாம் என்று சொல்லிக்கொண்டு, என் வார்த்தைகளை முடித்துக் கொள் கிறேன்.

MR. SPEAKER: இன்னும் ஒரு மணி இருக்கிறது. கனம் கல்யாணசுந்தரம் அவர்களுக்கு 10 நிமிஷம், கனம் அண்ணாத்துரை அவர்களுக்கு 10 நிமிஷம், நிதி அமைச்சருக்கு அரை மணி நேரம், எனக்கு ஓட்டெடுக்க 10 நிமிஷம் என்று பிரித்து விடுகிறேன். நீங்கள் ஆட்சேபிக்கமாட்டீர்கள் என்று நினைக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, இன்று பட்ஜெட் கூட்டம் முடியும் கடைசி நாள்.

(Sri A. Govindasamy in the Chair)

கிட்டத்தட்ட 160 கோடி ரூபாய் அளவுக்கு உள்ள வரவு செலவில், 81 கோடி ரூபாய் அளவுக்கு ரெவின்யூ செலவாக அமைந்திருக்கிறது என்பது பெரிய முன்னேற்றத்தை காட்டுகிறது என்று சொல்லிக் கொள்ளலாம். முன்பு ஆந்திரம், கேரளம், தமிழ்நாடு எல்லாம் ஒன்றாக இருந்தபோது இருந்த பட்ஜெட்டை ஒப்பிட்டுப்பார்த்தால், இந்தத் தொகை அதிகரித்திருக்கிறது என்பதைக் குறித்து அமைச்சர்கள் சந்தோஷப்படலாம். முன்னேற்றத்திற்கு இவைகளெல்லாம் அறிகுறி அல்லவா என்று கேட்கலாம். பல தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன என்று அவர்கள் கூறலாம். நான் அவற்றையெல்லாம் மறுக்க முடியாது. ஏனென்றால் அவற்றில் ஓரளவுக்கு உண்மை இருக்கிறது. செலவினங்கள் அதிகரித்திருக்கின்றன, வருவாயும் அதிகரித்திருக்கிறது. தொழிற்சாலைகள் தோன்றியிருக்கின்றனவா என்றால், நமக்கு திருப்தியளிக்காவிட்டாலும், இன்னும் எவ்வளவோ தோன்ற வேண்டுமென்கிற எண்ணமிருந்தாலும், ஏதோ சில தொழிற்சாலைகள் தோன்றியிருக்கின்றன. வேலை வாய்ப்புக்கள் திட்டமிட்டபடி கிடைக்காவிட்டாலும், புதிய வேலை வாய்ப்புக்கள் ஒரு சிலருக்காவது கிடைத்திருக்கின்றன. ஆனால் அதே சமயத்தில் முன்னேற்றத்தை நாம் எப்படி மதிப்பிடுவது என்பது பற்றியும் அமைச்சரவர்கள் சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அடுத்த ஓராண்டில் அவர்கள் எடுக்கக்கூடிய

[Sri M. Kalyanasundaram] [30th April 1960

நடவடிக்கைகள் எப்படியிருக்க வேண்டுமென்பதுபற்றி என் கருத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். தேசத்தின் செல்வம் பொருளாதாரம் எவ்வளவு அதிகரித்திருந்தாலும்கூட, அந்த சுபீட்சத்தில், செல்வத்தில் மக்களுடைய பங்கு, தொழிலாளிகள், விவசாயிகள், உத்தியோகம் பார்க்கக்கூடிய குமாஸ்தாக்கள் போன்றவர்களுடைய பங்கு அதிகரித்திருக்கிறதா, குறைந்திருக்கிறதா, அடுத்த ஓராண்டில் இவர்களுடைய பங்கு அதிகரிக்க சந்தர்ப்பம் இருக்கப்போகிறதா, அல்லது குறையப்போகிறதா என்பது பற்றி அமைச்சர்கள் கவனம் செலுத்த வேண்டும். இந்தப் பிரச்னையை தீர்த்தால் அவர்களைப் பாராட்ட நான் தயங்க மாட்டேன் என்று சொல்ல விரும்புகிறேன். எவ்வளவு கோடி

(Mr. Speaker in the Chair)

ரூபாய் செலவு செய்கிறோம், எவ்வளவு திறமையாகச் செய்கிறோம், ஊழல்கள் நமது ராஜ்யத்தில்தான் குறைவாக இருக்கிறது என்று பெருமைப்பட்டால் போதாது. நமது ராஜ்யம் இந்தியாவின் ஒரு பகுதி. மற்ற ராஜ்யங்களில் நேருவது நமது ராஜ்யத்தை விடாது. அப்படியிருக்கும்போது, கடந்த ஆண்டு உணவுப் பொருள்களின் ஒட்டு மொத்த உற்பத்தி இதற்கு முந்திய ஆண்டின் அளவுக்கு இல்லை, கொஞ்சம் குறைய ஆரம்பித்து இருக்கிறது என்று முதலமைச்சரவர்கள் குறிப்பிட்டார்கள். இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது என்று சொன்னார்கள். இதனுடைய எதிரொலி, நமது ராஜ்யத்தில்கூட சென்ற ஆண்டுடன் ஒப்பிட்டு பார்க்கிறபோது, இந்த ஆண்டு அறுவடை காலத்தில்கூட உணவுப் பொருள்களின் விலை இறங்கவில்லை. மாறாக, விலைவாசி ஏறித்தான் இருக்கிறது. விலைவாசி ஏற்றத்திற்கு காரணம், அரசாங்கம் மறைமுக வரிகள் விதிப்பது, நோட்டுக்கள் அடிப்பது, இவைகளாகும். Deficit financing நமது ராஜ்யத்தில் சொற்பந்தான். ஒட்டு மொத்தமாகப் பார்க்கிற போது மக்களுடைய வருவாயை குறைக்கும். தேசத்தின் செல்வம் அதிகரித்து உழைக்கக்கூடிய மக்களுடைய பங்கு குறைகிறது அல்லவா, அதுதான் விலைவாசி உயர்வுக்கு அடையாளம். விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தினால்தான், உழைக்கக்கூடிய மக்கள் பலனடைகிறார்கள் என்று பெருமை கொள்ள சந்தர்ப்பம் ஏற்படும். அப்படிப் பார்க்கிறபோது அடுத்த வருடத்தின் அறிகுறி அவ்வளவு திருப்திகரமாக இல்லை. அதற்கு ஒரு தீவிரமான, தைரியமான நடவடிக்கையை அரசாங்கம் எடுக்க வேண்டியிருக்கும் என்பதை வலியுறுத்திக்கூற விரும்புகிறேன். மேலும் நாம் போட்டிருக்கக்கூடிய திட்டங்களுக்கு 160 கோடி ரூபாய் அளவு செலவாகக்கூடிய சந்தர்ப்பத்தில், ஜனங்களிடத்தில் ஏற்படக்கூடிய திருப்தியையும், அரசாங்க நிர்வாக இயந்திரத்தில் ஏற்படக்கூடிய திருப்தியையும், தொழிலாளர்களிடத்தில் ஏற்படக்கூடிய உற்சாகத்தைப் பொறுத்துத்தான் உற்பத்தி பெருகும். பெருகிய உற்பத்தியை அவர்கள் அனுபவிக்க வேண்டும். அதற்கு விலைவாசியை கட்டுப்படுத்த நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கான யோசனைகள் விரிவாக பல தடவைகள் இந்தச் சட்ட சபையில் சொல்லப்பட்டிருக்கிறது.

30th April 1960] [Sri M. Kalyanasundaram]

இந்த வருடம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி வருடம். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு யோசனைகளை வகுக்கக்கூடிய வருடம். இந்த வருடத்தில் முடிவு எடுக்கக் கூடியதை பொருத்து இருக்கிறது, அடுத்து வரக்கூடிய ஆண்டு களில் நாம் காட்டக்கூடிய உற்பத்தி என்பதைப் பார்க்கிறபோது, இதனுடைய முக்கியத்துவத்தை புரிந்து கொள்ள முடியும்.

உற்பத்தி பெருக தொழிலில் அமைதி இருக்க வேண்டும், ஆபீசுகளில் அமைதி இருக்க வேண்டும் என்கிருர்கள். நான் இன்னும் ஒருபடி முன்னே போகிறேன். உற்பத்தி பெருக தொழிலாளர்களிடத்தில் ஆர்வம் ஏற்படவேண்டும். அமைச்சர் கள் இருந்தால் போதாது, அரசியல்வாதிகள் இருந்தால் போதாது, உழைக்கக்கூடிய மக்கள் இருக்க வேண்டும். அவர் களிடத்தில் ஆர்வம் இருக்க வேண்டும். அந்த ஆர்வம் ஏற்பட அவர்கள் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கிறதா, குறைந்திருக் கிறதா என்பதைப் பொறுத்திருக்கிறது. அப்படி பார்க்கிற போது, எல்லா உழைக்கக்கூடிய மக்களின் வாழ்க்கைத்தரமும் குறைந்திருக்கிறது. சொந்த லாபத்துக்காக தொழில் நடத்தக் கூடியவர்களுடைய வாழ்க்கைத்தரம் அதிகரித்திருக்கிறது என் பதற்கு அதிக விவாதம் தேவையில்லை. அதை அமைச்சர்களே ஒப்புக்கொண்டு விடுவார்கள். தொழில் அமைதி குறைந்து, வேலை நிறுத்தங்கள் ஏற்படக் கூடிய காரணம் விலைவாசி உயர்வும், வாழ்க்கைத்தர குறைவும்தான். ரூபாய் அளவில் பார்த்தால், நாங்கள் N.G.O.-க்களுக்கு 20 கோடி ரூபாய் அதிக மாக செலவு செய்திருக்கிறேம் என்று சொல்லுகிருர்கள். 20 கோடி ரூபாய் அதிகமாக செல்வு செய்திருப்பது உண்மைதான். அதே காலத்தில் விலைவாசி ஏற்றத்தோடு ஒப்பிட்டு பாக்கிற போது, இந்த 20 கோடி ரூபாய் அதிகமாக கொடுத்திருந்தும் கூட, அவர்களின் வாங்கும் சக்தி குறைந்திருக்கிறது. அதுபோல தொழிலாளர்களின் வாங்கும் சக்தியும் குறைந்து இருக்கிறது. ஆகவே அவர்கள் வாங்கும் சக்தியை உயர்த்த வேண்டியது தேசநலனுக்கு மிகவும் அவசியம் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்த அடிப்படை காரணத்தை அவர்கள் ஒப்புக்கொண்டால், அப்போது ஸ்டிரைக்குகள் நடந்தால் அதற் குள்ள காரணங்களை சரியானபடி பரிசீலனை செய்யத் தகுந்த சிறந்த மனது இருக்க முடியும். ஸ்டிரைக்குகளை எதிர்கட்சிகள் தூண்டிவிடுகின்றன என்கிற முடிவை அரசியல் காரணத்துக்காக சொல்லுவதாக இருந்தால் சொல்லிக் கொள்ளுங்கள். ஆனல் ஸ்டிரைக்குகளை அடக்கி, ஒடுக்க என்ன காரணங்கள் கண்டு பிடிக்கலாம் என்பதற்காக வேண்டி எதிர்கட்சிகள் தூண்டிவிடு கின்றன என்று சொல்லி, அவற்றின்மீது போலீஸை ஏவி விட வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். உற்பத்தி பெருக் கத்திற்கு உழைக்கக்கூடிய மக்களின் ஆர்வம்தான் பிரதான மானது. எதிர்கட்சிமீது உங்களுக்கு கோபம் இருக்கலாம். எதிர்கட்சியை நாங்கள் விட்டுவைத்திருக்கிறேம் என்று பெருந் தன்மை பேசுகிருர்கள். நான் அவர்களுக்குச் சொல்லுவேன், அமைச்சர்களுடைய இரக்கத்தால் அல்ல நாங்கள் இருப்பது.

அவர்களுடைய அடக்குமுறைக்கு பயந்துவிடாமல்தான் நாங்கள் இருக்கிறோம். அங்கே ரஷ்யாவில் செய்கிறார்கள், சீனாவில் செய்கிறார்கள் என்று சொல்லி இங்கே வந்து ஒன்றும் பண்ண வேண்டாம் கம்யூனிஸ்டுகள் என்று மிரட்டுகிறார்கள். கம்யூனிஸ்டுகள் அப்படி செய்கிறார்கள் என்றால், அதற்குள்ள காரணத்தை விளக்க வேண்டுமென்றால், தனியாக விவாதம் வைத்துக் கொள்ளலாம். அவர்களும் காரணம் சொல்லட்டும், நாங்களும் சொல்லுகிறோம், விவாதம் ருசியாக இருக்கும் பார்க்கலாம். ஆனால் ஒரு கட்சி வளருவதும், அதிகாரத்தில் இருப்பதும் யாருடைய ஆதரவைப் பொறுத்திருக்கிறது என்றால், மக்களுடைய ஆதரவைப் பொறுத்திருக்கிறது. துப்பாக்கி பலத்தைக் கொண்டல்ல என்பதை சிங்மன் ரீக்கு ஏற்பட்ட கதியிலிருந்து பார்த்துக் கொள்ளலாம். எதிர்கட்சி வளருவது மக்கள் ஆதரவு இருப்பதால்தான். எதிர்கட்சியை அடக்க முடியாமல் இருப்பது, அமைச்சர்களுடைய பெரியமனது காரணமாக அல்ல. எதிர்கட்சிக்கு இந்த நாட்டில் இருக்கக்கூடிய வேர், பலமாக இருப்பதால் அடக்க முடியவில்லை. அடக்க வேண்டும் எதிர் கட்சிகளை என்ற விருப்பம் இருக்கிறது அவர்களுக்கு அந்த விருப்பத்தைத்தான் சொல்லிப் பார்க்கிறார்கள். ஆனால் விருப்பம் நிறைவேறாது என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். அது ஒரு பக்கம் இருக்கட்டும், ஸ்டிரைக்குகள் நடக்காமல், எதிர்கட்சிகளுக்கு சந்தர்ப்பம் கொடுக்காமல் செய்துவிட்டால் என்னைப்போல சந்தோஷப்படுகிறவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். எதிர்கட்சிகள் ஸ்டிரைக்குகளின் நியாயத்தை எடுத்துக்கூறி, அதற்கு ஆதரவு கொடுத்து, பொதுஜன ஆதரவை திரட்டுகிறார்கள், அது குற்றம் என்று சொன்னால் அந்தக் குற்றத்தை உறுதியாகச் செய்வோம். இன்றைக்கு முதலாளிகள் தொழிலாளிகளிடையில் ஏற்படக்கூடிய தகராறில், சர்க்கார் முதலாளிகளுக்கு எதிராக நிற்க முடியாத காலத்தில், தொழிலாளிகளுக்கு ஆதரவாக நின்று, அவர்களுடைய கோரிக்கைகளில் இருக்கக்கூடிய நியாயத்தை மக்களிடத்தில் சொல்லி, தொழிலாளர்களுக்கு தைரியத்தை கொடுக்க வேண்டியது எதிர் கட்சிகளின் கடமை. அப்படிச் செய்தால்தான் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும். திட்டத்திற்கு பணியாற்றுகிற ஆர்வத்தை தொழிலாளர்களிடையே பெருக்க முடியும். அவர்களை அடிமைபோல் ஆக்கினால் அவர்களுடைய உற்சாகம் குறையும். அதனால் திட்டத்திற்கோ, திட்ட வேலைகளுக்கோ உதவி செய்தவர்கள் ஆகமாட்டோம் என்பதுதான் என்னுடைய கருத்து. இதைச் சொன்னால் திட்டத்திற்கு வேட்டு வைக்கிறார்
10-30 a.m. கள் என்று அமைச்சர்கள் தயங்காமல் சொல்லலாம். ஆனால்
நான் இதற்கு முன்னமேயே பலமுறை பேசியிருக்கிற காரணத்தினால் அதைக் குறித்து வலியுறுத்த வேண்டிய அவசியம் இருக்காது என்று கருதுகிறேன். அமைச்சர் அவர்கள்கூட உண்மையை ஒத்துக்கொள்வார்கள். தேசீய அபிவிருத்திக் கவுன்சில் கூட்டத்தில்கூட அவர் மிகக் கடுமையாகப் பேசுவதாகக் கேள்விப்படுகிறேன். அங்கே அவர்களுக்கு என்ன இடையூறு ஏற்படுகிறதோ என்னவோ? அதற்காக அந்தக்

30th April 1960] [Sri M. Kalyanasundaram]

கோபத்தை இங்கே காட்டமாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஒரு வேளை எங்களைத் திட்டுகிற மாதிரி திட்டிவிட்டு அங்கே போய்ச் சண்டை போடுவதனுல் அவருக்கு லாபம் உண்டு என்று கருதினுல் அதைப் பற்றி எங்களுக்கு ஆட்சேபனை இல்லை.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் உருவாக வேண்டிய கட்டத்தில் இருக்கிறோம். பல புதிய தொழில்களுக்கு அஸ்திவாரம் போட்டாக வேண்டும். நம் ராஜ்யத்தில் தொழில் வளர்ச்சிக்கு இந்த ஆண்டே நடவடிக்கை எடுத்துக்கொண்டாக வேண்டும். அதுவும் முக்கியமாக நம் ராஜ்யத்தில் உருக்குத் தொழிலை ஆரம்பிக்க வேண்டும். உருக்கு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்று சொல்வதை விட உடனடியாக இவ்வாண்டே ஆரம்பிக்க வேண்டும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஒரு கோடி டன் உற்பத்தியைப் பெருக்குவதற்கு இலக்கு வைத்திருக்கிருர்கள். பொதுத் துறையில் மூன்று தொழிற்சாலைகள் இருக்கின்றன. இன்னும் நான்கு மிகப் பெரிய அளவில் ஏற்படுத்தப் போவதாகச் சொல்லுகிருர்கள். வரவேற்கிறோம். ஆனுல் இந்தத் தொழில் எப்படி அமைய வேண்டும் என்பதில் திட்டமான கொள்கை இருக்க வேண்டும். ஒரு பெரிய நாட்டில் தொழில் பரவலாக அமைவது அங்கங்கே உள்ள ராஜ்யங்கள் எல்லாம் ஒன்று சேர வளம் பெறுவதற்கு வழிவகை ஏற்படுத்தும். அப்படிப் பார்க்கிறபோது சென்னை ராஜ்யத்தில் அவசியம் ஒரு தொழிற்சாலை ஆரம்பிக்க வேண்டியது மிகமிக அவசியம். ஆகவே இவ்வாண்டிலேயே ஆரம்ப நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஆனுல் ஒன்று சொல்லலாம், நிலக்கரி அவசியமாகத் தேவைப்படுகிறது என்று. நெய்வேலியில் கிடைக்கக்கூடிய பழுப்பு நிலக்கரியைக் கூட கோக்காக மாற்ற ஆராய்ச்சி இருக்கிறது. மனம் இருந்தால் அதற்கும் ஏற்பாடு செய்யலாம். இன்னென்று, இன்றைக்கு நம் தேசத்தில் கிடைக்கக்கூடிய நிலக்கரியை தரம் பிரித்து அங்கங்கே உள்ள தொழில்கக்கு ஏற்றபடியாக ஒரே விலையில் எல்லா இடங் களிலும் கிடைக்கும்படியாக ஏன் செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடாது ? அதற்கு அதிகாரம் இல்லையா ? நிலக்கரி, பீகார் ஆகட்டும், வங்காளம் ஆகட்டும், சென்னை ஆகட்டும் எல்லா ராஜ்யங்களிலும் ஒரே விலையில் கிடைக்கும் படியாக ஏற்படு செய்தால் நிச்சயமாக எல்லா ராஜ்யங்களிலும் தொழில் சீராக, சமமாக வளர்வதற்கு வாய்ப்பு ஏற்படும். ஆனுல் இன்றைய தினம் அப்படிக் கிடைக்க வழியில்லை. உருக்குக்கு அப்படி எல்லா இடங்களிலும் ஒரே விலையில் கிடைக்க வழியில்லையா ? சிமிண்டு கிடைக்க வழியில்லையா ? அதுபோல் எரிபொருள் சம்பந்தப்பட்ட மட்டில் ஒரே விலையில் எல்லா இடங்களிலும் கிடைப்பதற்கு மத்திய சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும். குறிப்பாக நம் ராஜ்யத்தில் குந்தா திட்டம் வந்தவுடன் இங்கு கொஞ்சம் மலிவான விலையில் மின்சாரத்தை விநியோகம் செய்யலாம் என்று சொன்னவுடனே—தேசிய அபிவிருத்திக் கவுன்சில், மத்திய சர்க்கார்—அப்படிக் கொடுக்கக்

கூடாது, கொடுத்தால் அது மற்ற ராஜ்யங்களின் தொழில் வளர்ச்சியைப் பாதிக்கும் என்று தடுக்கவில்லையா ? ஒரு பக்கம் குறைவான விலையில் மின்சாரத்தைக் கொடுத்து இன்னொரு பக்கம் அதன் விலை அதிகமாக இருந்தால் ஒரு பக்கத்திற்கு ஒரு பக்கம் ஏற்றத்தாழ்வை உண்டாக்கிவிடும் என்று சொன்னது போல நிலக்கரியைப் பொறுத்தவரையிலும் ஏன் அப்படிச் செய்யக்கூடாது ? திட்டக் குழு சொல்லியிருக்கலாம், இந்த ராஜ்யத்தில் மின்சாரத்தை மலிவாகக் கொடுக்கக் கூடாது என்று. அல்லது தேசிய அபிவிருத்திக் கவுன்சில் சொல்லியிருக்கலாம். நான் பைலைப் பார்த்துப் பேசவில்லை. அடிப்படை உண்மை என்னவோ, உண்மை. ஆகவே அதுபோலவே நிலக்கரியையும் இந்தியா பூராவும் எல்லா ராஜ்யங்களிலும் ஒரே விலையில் கிடைப்பதற்கு உடனடியாக இவ்வாண்டே வழி செய்தால்தான் எல்லா இடங்களிலும் குறிப்பாக நம் ராஜ்யத்திலும் தொழில் பரவலாக ஏற்படுவதற்கு வழி ஏற்படும் என்று சொல்லிக்கொள்கிறேன். ஒரு பக்கம் நிலக்கரி கிடைக்கிறது. அதனுல் விலைகுறைவாகக் கிடைக்கிறது; இன்னொரு பக்கத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டியிருக்கிறது, அதனுல் விலை அதிகமாகிறது என்று இருந்தாலும் கூட உடனடியாக அந்த நிலக்கரிப் பிரச்னை தீர்க்கப்படவேண்டும். சேலத்தில் உருக்குத் தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை இந்த ஆண்டே எடுத்துக்கொள்ள வேண்டும். சேது சமுத்திரத் திட்டம், ரயில் பாதைத் திட்டம் இவைகள் யாவும், கவனிக்கப் படவேண்டும். முக்கியமாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் சம்பந்தமாக திட்டக் குழுவின் முன்பாக நமது அரசாங்கத்தார் குறிப்பிட்டுள்ள பல விஷயங்களைச் சொன்னுர்கள். திட்டக் குழுவின் முன்பாக இவர்கள் யோசனைகளைக் கூறி வற்புறுத்துவதற்கு முன்பாக இந்த சட்ட மன்றத்தில் வைத்து அவை பற்றி விவாதித்து எல்லா அங்கத்தினர்களும் அதை நன்ருகப் புரிந்துக்கொள்வதற்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். அதன் பிறகு நகல் திட்டம் வெளியான பிறகும் அதை இங்கே வைத்து விவாதிக்க வேண்டும். முதலிலே ஒரு விவாதம் அவசியம், நகல் திட்டம் வெளியான பிறகு எவ்வளவு பணம் கிடைக்கிறது, எதை எதை செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் எல்லா அங்கத்தினர்களும் விவாதிக்க ஒரு சந்தர்ப்பம்—ஆக இந்த இரண்டு சந்தர்ப்பங்களும் அங்கத்தினர்களுக்கு அளிக்கப்படவேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

Sri C. N. ANNADURAI: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, அந்த ஆண்டுக்கான நிதி நிலை பற்றிய விவாதத்தின் இறுதிக் கட்டடத்தில் ஆட்சியாளர்கள் கேட்கின்ற அளவுக்குப் பணத்தை அவர்கள் பெறுவதற்கான எண்ணிக்கைப் பலத்தைவைத்துக் கொண்டிருக்கிற நிலைமையில் நான் எடுத்துச் சொல்கின்ற கருத்துக்கள் அவர்கள் கேட்கக்கூடிய பணத்தைத் தடுத்து நிறுத்தப் போவதில்லை. ஆகையால் சர்க்கார் கட்சியின் தலைவர் மாற்றுக் கட்சியாளர்கள் என்னென்ன மனதில் எண்ணிக்

30th April 1960] [Sri C. N. Annadurai]

கொண்டிருக்கிறார்கள் என்பதை விரிவாக விளக்கமாக எடுத்துச் சொல்லும்படியாகக் கேட்டிருக்க வேண்டும். அப்படி எடுத்துச் சொல்வதற்காவது வாய்ப்பு அளித்திருக்க வேண்டும். இல்லை என்றால் மனதில் தோன்றக்கூடிய எண்ணங்களை சட்ட மன்றத்தில் எடுத்துச் சொல்ல நல்ல வாய்ப்புக் கொடுக்காமல் போய்விட்டால் வெளியில் அதைப்பற்றி பல்வேறு வகையான கோணங்களில் பேசிக்கொண்டே போவதற்கு வழிவகை ஏற்பட்டு விடும். ஆனால் இன்றைய தினம் நிதி அமைச்சர் அவர்களுக்கு வேறு ஒரு அலுவல் குறுக்கிட்டு இருக்கிற காரணத்தை எடுத்துக்காட்டி மிகக் குறைவாக கருத்துக்களை இன்றைக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு இருக்கிறது. அதனால் நான் விரிவாக ஒவ்வொரு துறையையும் பற்றிப் பேசத் தேவையில்லையென்று கருதுகிறேன். குறிப்பாக அமைச்சர் அவையின் போக்கை, நிர்வாகத்தினுடைய தன்மையை. அமைச்சர் அவர்கள் கொடுக்கின்ற வாக்குறுதி களினுடைய நிலையைப் பற்றி மட்டும் இந்த நேரத்தில் குறிப் பிடுவது மிகவும் பொறுத்தம் என்று கருதுகிறேன்.

இந்த அமைச்சரவை எதிர் தரப்பில் உள்ளவகள் எடுத்துச் சொல்லுகின்ற கருத்துக்களுக்கு அளிக்கின்ற பதில் பொறுப்புள்ளதாக எனக்குப் படவில்லை. உதாரணமாக இந்த மன்றத்தில் ஒரு அங்கத்தினர் கேட்ட கேள்விக்கு—அதுவும் பாராளுமன்றத்தில் இருக்கிற உறுப்பினர் பேசிய பேச்சைப் பற்றி—சேலத்தில் இருந்து எடுத்த இரும்பைக் கொண்டு இங்கிலாந்தில் பாலம் கட்டினார்களா—என்ற கேள்விக்கு ஒரு அமைச்சர் தன் பொறுப்பை மறந்து, பாராளுமன்ற உறுப்பினர் கடமை, பொறுப்பு என்ன என்பதை மறந்து கேலியாக—அது வேறு ஒரு சேலமாக இருக்கலாம்—அமெரிக்காவில் கூட சேலம் என்று இருக்கிறது—எங்களிடத்தில் அப்படிப்பட்ட தகவல் இல்லை—இந்த சேலத்தில் இருந்து எடுத்த இரும்பைக் கொண்டுதான் இங்கிலாந்தில் பாலம் கட்டப்பட்டது என்பதற்கு ஆதாரம் இல்லை—என்று சொன்னார்கள். உண்மையிலேயே அவர் அப்படிக் கேலியாகப் பேசுவதை விடுத்து இதற்கு ஆதாரம் இருக்கிறதா, எங்கே இருக்கிறது என்று அதற்குப் பிறகாவது பார்த்துத் தெரிந்துகொண்டு தாம் சபையில் அப்படிப் பேசியது தவறு, அதனால் எதிர் தரப்பில் உள்ளவர்கள் வருத்தப் படவேண்டாம் என்று எடுத்துச் சொல்லியிருந்தால் அவர் களுடைய பெருந்தன்மையைப் பாராட்டியிருப்பேன். அதற்கு மாறாக அமைச்சர் அவர்கள் இங்கே கேலியாகப் பேசிய பேச்சு—பத்திரிகையில் மிக விரிவாக எதிர்கட்சிக்காரர்கள் பொறுப்பற்ற முறையில் பேசுகின்றார்கள் என்பதை விளம்பரப்படுத்தும் வகையில் அவர்கள் இந்த மன்றத்தில் பேசினார்கள். அது மிகவும் கண்டிக்கத் தக்கது என்பதையும், பாராளுமன்ற உறுப்பினர்கள் எடுத்துச் சொல்லியது முற்றிலும் பொறுத்தமானது, அதற்கான ஆதாரம் இருக்கிறது என்பதையும் வலியுறுத்தி எடுத்துச் சொல்லி உணர்த்த விரும்புகிறேன். "India's Mineral Wealth" என்ற புத்தகத்திலே சேலத்தில் இருந்த இரும்பு எங்கிருந்து,

எப்படி எடுத்துச் செல்லப்பட்டது, இங்கிலாந்து நாட்டிலே இரண்டு பாலங்களுக்கு அவை எவ்வாறு உபயோகப்படுத்தப் பட்டது என்பதெல்லாம் தக்க ஆதாரங்களோடு சொல்லப் பட்டிருக்கிறது. ஜனநாயகம் நல்ல முறையில் வளர வேண்டும் என்ற நோக்கம் உடைய நாடுகளில் எதிர்கட்சிக்காரர்கள் எடுத்துச் சொல்லுகிற கருத்துக்கள்—சில தவருக இருந்தாலும் கூட—அதை கொஞ்சம் நல்ல மனத்தோடு கவனித்து, அதை வளர்த்தால் தான் ஜனநாயகம் வளரும். எண்ணிக்கை பலம் இருக்கிறது என்கிற நினைப்பினுலே கேலியாகப் பேசுவதோ கிண்டல் செய்து கண்டிப்பதோ, சொல்ல வேண்டாம் என்று சொல்வதோ—உண்மையிலேயே ஜனநாயகத்தை வளர்ப்பது ஆகாது. இந்த ஒரு பிரச்னேயைப் பற்றி மட்டும் பேசி ஆளும் கட்சியினரை பற்றி ஊர் முழுவதும் சிரிக்கும்படியாக எங்களால் செய்துவிட முடியும். பொறுப்பற்ற தன்மையில் ஒரு அமைச்சர் பாராளுமன்றத்தில் எடுத்துச் சொன்ன கருத்தைக் கேலி செய்துவிட்டு, சேலம் இரும்பா, இந்தச் சேலம் இருக்காது, அமெரிக்காவில்கூட ஒரு சேலம் இருக்கிறது என்று சொல்கிருர். ஆனுல் நம்முடைய சேலத்து இரும்பை எடுத்துச் சென்று தான் இங்கிலாந்து நாட்டிலே இரண்டு பாலம் கட்டினுர்கள் என்பதற்கு இதோ ஆதாரம் இருக்கிறது என்று பொது மக்களிடத்தில் எடுத்துச் சொல்ல முடியும். ஆனுல் அமைச்சர் அவர்கள் சிறிதுகூட பொறுப்பற்ற முறையில் பேசி யிருக்கிருர்கள். தாங்கள் என்ன சொல்கிறேம், எப்படி பிறர் மனத்தைப் புண்படுத்தும் என்று யோசிக்காமல் பேசுகின்ருர்கள். இதைப்பற்றி யெல்லாம் அமைச்சரவை எண்ணிப்பார்க்க வேண்டும்.

எதிர்க்கட்சி எடுத்துச் சொல்லும் கருத்துக்களே அவ்வளவு அலட்சியத்திற்கு உரியதாகக் கருதாமல், பொறுப்புள்ளதாகக் கருதி, பொறுப்போடு பதிலளிக்க வேண்டுமென்று அமைச்சர வையை நான் வேண்டிக்கொள்கிறேன். எனக்கு மதிப்பு அளிக்கத் தேவையில்லே. எனக்கு அளிக்க வேண்டியவர்கள் அளிக்கிருர்கள். ஆனுல் இந்த அமைச்சரவைக்கு வெளி உலகத்திலே இருக்கும் ஜனநாயக வாதிகள் நல்ல மதிப்பு அளிக்க வேண்டும் என்பதற்காகத்தான் இதை நான் குறிப்பிடுகிறேன். $11\frac{1}{2}$ மணிக்கு மேல் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இங்கிலாந்து நாட்டிலிருந்து வரக்கூடிய ஒரு அரசியல் தலைவரோடு, நிர்வாகத் தலைவரோடு, பேச இருக்கிருர். அவருக்கு இந்த அமைச்சரவை எப்படி நடந்துகொள்கிறது என்று தெரிந்தால் எவ்வளவு கேலி செய்வார்கள் என்று அவர்கள் எண்ணிப்பார்க்க வேண்டும்.

இரண்டாவதாக, இங்கே எடுத்துச் சொல்லப்படுகின்ற, ஆட்சியாளர் வைத்திருக்கும் கொள்கைகள் குறைபாடானது என்று எங்கள் தரப்பில் எடுத்துப் பேசினேம். எங்கள் தரப்பு என்று சொல்லும்போது எதிர்க் கட்சி இரண்டு மூன்று வகையாக இருப்பதால் எங்களுக்குள்ளேயே இருக்கும் பிளவை பயன் படுத்தி, எங்களுக்குள்ளே இருக்கும் கருத்து வேற்றுமையைப்

30th April 1960] [Sri C. N. Annadurai]

பயன்படுத்தி சாமர்த்தியமாக பதில் அளிக்க அமைச்சரவை சந்தர்ப்பம் கொடுக்கும் போதெல்லாம் அவர்கள் அவர்கள் எடுத்துச் சொல்லும் கருத்துக்களை நேரடியாக அவைகளுக்கு விளக்கங்கள் சமாதானங்கள் இந்த அமைச்சரவை தரவில்லை என்று நான் வருத்தத்துடன் சொல்லுகிறேன்.

இந்த நாட்டிலே எது செய்வதானாலும் வரி போட்டுத்தான் செய்தாக வேண்டும் என்ற அடிப்படைக் கருத்தை இந்த அமைச்சரவை மாற்றிக் கொள்ள வேண்டும். அது மட்டுமல்லாமல் வருவாய் தேடிக்கொள்வதற்கு ஏற்ற வகையிலே அமைச்சரவையும், ஆளும் கட்சியினரும் வழிவகை ஏற்படுத்திக் கொண்டால்தான் வளருகின்ற பொருளாதார நிலைமையில், நாட்டு மக்களின் தேவைகள் அதிகப்பட்டுக் கொண்டு போகும் இந்த நாட்களில் நாட்டு மக்களுக்குத் தேவையான வசதிகளை அவர்களால் பெற்றுத்தரமுடியும். இந்தக் கண்ணோட்டத்தோடு வருவாய் தரும் பல வசதிகளை இந்த ஆட்சியாளர் தேடிக்கொள்ள வேண்டுமென்ற கருத்தோடுதான் பஸ்களை தேசியமயமாக்க வேண்டுமென்று நான் வலியுறுத்திச் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன். இதைப் பற்றி அமைச்சரவை எங்களுக்கு பதில் சொல்ல வேண்டுமென்றால் "இப்பொழுது இல்லை. படிப்படியாகச் செய்வோம்" என்று பதிலுக்குச் சொன்னாலும் அவர்கள் அதை கொள்கையாக ஏற்றுக் கொண்டு விரைவில் வருவாய் தரும் இனங்களைத் தேடி, வாடிக் கொண்டிருக்கும் மக்களுக்கு ஓரளவு ஆறுதல் அளிக்க வேண்டுகிறேன். அவர்கள் மத்திய சர்க்காரிடத்தில் வலியுறுத்தினாலும் சரி, அல்லது அவர்களுக்கே இருப்பதாகக் கருதப்படும் அபாரமான திறமைகளைப் பயன்படுத்தினாலும் சரி, இந்த மாநிலத்திற்குத் தேவையான தொழில்களை வளப்படுத்துவதற்கு உறுதுணையாக மின்சார வாய்ப்புகள் நமக்கு தீர்ந்து போய்விட்ட காரணத்தால் இங்கு அணு உலைக்கூடத்தை அமைக்க எல்லா முயற்சிகளும் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

இதைப் போலவே தூத்துக்குடி துறைமுகத்தை ஆழ்கடல் துறைமுகமாக்கும் திட்டத்தையும், சேது சமுத்திரத் திட்டத்தையும் ஒன்றாக இணைத்து அதை விரைவில் நிறைவேற்றுவதற்கு அவர்கள் வழிவகை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இதைப் போல் நம்முடைய தொழில் வளம் பெருகி இந்தத் தொழில் வளம் நல்ல பயனைத் தர வேண்டுமானால், தென்னாட்டில் —அதிலும் குறிப்பாக சென்னை ராஜ்யத்தில் —இருக்கும் ரயில் போக்குவரத்து சாதனங்களை எந்த அளவிற்கு அதிகப்படுத்த வேண்டுமோ அந்த அளவிற்கு அதிகப்படுத்துவதற்கு மத்திய சர்க்காரை வலியுறுத்த வேண்டும்.

இதை எடுத்துச்சொல்லும் நேரத்தில், பிரஜா சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் திரு. சின்னதுரை அவர்கள் சொன்னதற்கு நம்முடைய நிதி அமைச்சர் மெத்த ஆத்திரங்கொண்டும், கோபம் கொண்டும் "எல்லாம் நீங்கள் வந்தால் பார்த்துக் கொள்ளலாம், எங்களுக்குத் திறமை அவ்வளவுதான்" என்று

[Sri C. N. Annadurai] [30th April 1960

அடக்க உணர்ச்சி மேலிட்டு விட்டவர் போல் பேசினார்கள். அது நாடக பாணியில் உள்ள அடக்க உணர்ச்சி என்று கொள்ளலாமே தவிர உண்மையிலேயே நம்முடைய கோரிக்கையை மத்திய சர்க்காரிலே எந்த அளவு வலியுறுத்துகிறார்கள் என்பதை எண்ணிப்பார்க்கும் நேரத்தில் இந்த மன்றத்தில் அவர்கள் மக்களுக்கு ஏமாற்றம் தரும் வகையில் நடந்து கொண்டிருக்கிறார்கள். நல்ல வேளையாக நம்முடைய மராமத்து அமைச்சர் இங்கு இருக்கிறார்கள். இந்த மன்றத்தில் ஒரு தடவைக்கு பத்துத் தடவை பாலாற்றுப் பிரச்னையைக் குறித்து பேசியிருக்கிறேன். பேசியிருக்கும் ஒவ்வொரு நேரத்திலும் அமைச்சர் அவர்கள் எழுந்து "அது குறித்து வாதித்துக் கொண்டிருக்கிறோம், மாநாடு கூட்டியிருக்கிறோம், மைசூர் சர்க்காருடன் பேசியிருக்கிறோம்" என்று இந்த இடத்தில் நம்பிக்கை ஊட்டத் தக்க அளவில் பதில் அளித்தார்கள். ஆனால் அண்மையில் மத்திய அரசாங்கத்திலிருந்து பாராளுமன்றத்தில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கும்போது அங்கே அமைச்சராக இருக்கிறவர் "சென்னை துரைத்தனத்தார் மேற்கொண்டு முயற்சி செய்யதேவையில்லை என்று விட்டுவிட்டார்கள். ஆகையால் நாங்கள் இந்தப் பிரச்னையைக் கட்டிப் போட்டு விட்டோம்" என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். ஏன் இந்த மன்றத்தில் ஏமாற்றம் தரத்தக்க வார்த்தைகளைத் தருகிறீர்கள் ? இன்று உங்களால் சண்டை போட முடிய வில்லை என்றால் உங்கள் கையால் ஆகாததனத்தை பகிரங்கமாக ஒப்புக்கொள்ளுங்கள். இதை விட்டுவிட்டு "நாங்கள் மத்திய சர்க்காருடன் பேசிக்கொண்டிருக்கிறோம்" என்று சொல்லுகிறீர்கள். நீங்கள் இப்படி பேசிக் கொண்டிருக்கும் போது இந்த ஆட்சியாளர் முகத்தில் கரி பூசுவதற்கு கன்னத்தில் அறைந்தாற்போல் மத்திய சர்க்காரிலிருந்து பதில் அளிக்கிறார்கள், பாராளுமன்ற அமைச்சர்கள். சென்னை துரைத்தனத்தார் இதற்கு மேல் செய்யத் தேவையில்லை என்று சொல்லிவிட்ட காரணத்தால் சும்மா இருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். நான் இந்த அமைச்சரவையைக் கேட்கிறேன் வெட்கமாக இல்லையா என்று. நீங்கள் எங்களுக்கு இந்த மன்றத்தில் அளிக்கும் பதிலையும் உங்கள் போக்கையும் . .

THE HON. SRI P. KAKKAN: மதிப்பிற்குரிய கனம் அங்கத்தினர் வெட்கமில்லையா என்று கேட்கிறார்கள். இது முறையல்ல. இது பற்றி நாங்கள் மத்திய சர்க்காருடன் பேச்சு வார்த்தைகள் நடத்திக் கொண்டிருக்கிறோம்.

SRI C. N. ANNADURAI: நம்முடைய அமைச்சர் அவர்கள் இந்த அளவிற்குத்தான் பதில் அளிக்க முடிகிறது என்பதைக் கண்டு பரிதாபப்படுகிறேன். நான் சொல்லுவது இந்த அமைச்சரவை இந்த இடத்தில் கொடுத்திருக்கும் பதிலை உண்மையிலேயே கேலி செய்யத்தக்க வகையில், கண்டிக்கத்தக்க வகையில் இந்திய சர்க்கார் பாராளுமன்ற அமைச்சர்கள் பேசுகிறார்கள். ஒன்று இவர்கள் நம்மை ஏமாற்றி இருக்க வேண்டும். அல்லது இவர்களை மத்திய சர்க்கார் ஏமாற்றி இருக்க வேண்டும்.

30th April 1960] [Sri C. N. Annadurai]

இரண்டிலே எதுவாக இருந்தாலும் வெட்கப்படத்தக்கதுதான்—கண்டிக்கத்தக்கதுதான். மக்களிடையே சொல்லிவிட்டு வந்துவிட்டீர்கள். இதனால் ஓட்டுக்குப் போகிறீர்கள் என்று நிச்சயமாக அமைச்சர்களுக்குக் கூறுகிறேன். மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமையை எடுத்துக் காட்டி ஒரு முறைக்கு 10 தடவையாக இந்த மன்றத்தில் பேசியாகிவிட்டது. இனி இந்த மன்றத்தில் இதைக் குறித்து பேசுவதாக இல்லை. மக்களை கிளர்ச்சிச் செய்யத் தூண்டிவிட்டு அமைச்சரின் வீட்டின் முன் மரியல் செய்து இதைப்பெறுவது என்பது கடினமான காரியம் அல்ல. பள்ளிப்பிள்ளை பேசும் வகையிலே மராமத்து அமைச்சர் பேசியதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. இதை அவர்கள் பொறுப்பற்ற முறையிலே வழக்கமாக பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

THE HON. SRI P. KAKKAN: நான் பொறுப்பற்றமுறையிலே இந்த மன்றத்தில் பதில் சொல்லவில்லை. இதை பரிசீலனை செய்யவேண்டும் என்றால் உடனே செய்கிறோம் என்று சொல்லியிருந்ததை அங்கத்தினர் சாதகமாக எடுத்துக்கொண்டு மக்களிடத்தில் சொல்லி இருப்பது முற்றிலும் தவறு. அவர்தான் பொறுப்பற்ற முறையிலே பேசுகிறார்.

SRI C. N. ANNADURAI: அமைச்சர் அவர்களுக்கு ஆத்திரம் வருவதில் ஆச்சரியம் இல்லை. இப்போது அவர்கள் பேசினார்கள் மக்களிடத்திலே வாக்களித்து விட்டீர்கள் என்று. பொறுப்பற்ற பேச்சு என்றுதான் மறுபடியும் சொல்லுகிறேன். பாராளுமன்றத்தில் உள்ள அமைச்சர்கள் கேலி செய்யும் வகையிலே பேசுகிறார்கள் என்றால் அதைப் பார்த்து என்ன சொல்லுவது ?

மைல் கற்களில் இந்தியில் எழுதுவதை நாங்கள் விரும்பவில்லை. இதைப்பற்றி மத்திய சர்க்காருக்கு எழுதி இருக்கிறோம் என்று பேசப்பட்டது. ஆனால் அங்கே இருக்கும் அமைச்சர் அப்படி சென்னை துரைத்தனத்தாரிடமிருந்து எனக்கு ஒரு தகவலும் வரவில்லை என்று சொல்கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஹிந்தி எண்களைப் பற்றிதான் நான் சொன்னேன். இங்கே மட்டும் அல்ல இந்தியா முழுவதும் இந்தி எண்கள் புகுத்த வேண்டிய அவசியம் இல்லை என்று சொன்னேன்.

SRI C. N. ANNADURAI: மைல் கற்களைப்பற்றி இங்கே மறுத்துப் பேசுகிறீர்கள். வெளியிலே கண்டித்துப் பேசி மக்களுடைய அன்பைப்பெறப் பார்க்கிறீர்கள். இப்படியாக இங்கே உள்ளவர்களை ஏமாற்ற விரும்புகிறீர்கள் அல்லது அங்கே இருப்பவர்களுக்கு பயப்படுகிறீர்கள் என்ற இரண்டு வகையான குற்றச்சாட்டை நிதி அமைச்சர் பாஷையிலே சொல்லுவதானால் இந்தக் குல்லாய் இந்தத் தலைக்குப் பொருந்துமா என்றுதான் சொல்லவேண்டும். ஆகையால் குறைபாடுகள் இருக்கின்றன என்றுதான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

உணவு மண்டலத்தில் இருந்து நம்முடைய தமிழகத்தை தனியாக பிரிக்க வேண்டும், சென்னை ராஜ்யத்தைத் தனிப்படுத்த வேண்டும் அப்போதுதான் உணவுப் பிரச்னை தீரும், அதற்காக மத்திய சர்க்காரைக் கேட்டிருக்கிறோம் என்று அமைச்சர் பாராட்டிச் சொல்லுகிறார்கள். இப்படி இங்கே தரப்படுகிற பதிலுக்கும் அங்கே பேசப்படுகிற பதிலுக்கும் இருக்கும் முரண் பாட்டை அருள்கூர்ந்து யோசித்துப் பார்த்து அமைச்சரவைக்கு அங்கே மதிப்பு குறைகிறதா ? அல்லது இங்கே மதிப்பு குறை கிறதா ? எந்த இடத்தில் மதிப்பு குறைவானாலும் நல்லது அல்ல என்றுதான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். கடைசியாக நான் அவர்களுக்கு எடுத்துச் சொல்ல விரும்புவது, நிலத்திற்கு உச்சவரம்பு கட்டும் மசோதா விவாதத்திற்கு வந்தபோது எவ்வளவு நிலம் ஏழை மக்களுக்கு கிடைக்குமென்று ஆராய்ந்து பார்த்ததில், அதிகம் கிடைக்காது என்று தெரிவதால் இன்றைய தினம் விளை நிலங்களாகயில்லாத நிலங்களை எடுத்து உழவர் களுக்குக் கொடுத்து அவைகளை விளைநிலமாக ஆக்குவதற்குரிய ஒரு நல்ல திட்டத்தை நீங்கள் விரைவில் கொண்டுவர வேண்டு மென்று கேட்டுக்கொண்டு நமது நிதியமைச்சர் அவர்கள் நேற்று சொன்னதுபோல் மனித சக்தியைப் பயன்படுத்துவதற் காக, இந்த நாட்டில் மனித சக்தியை வைத்துக் கொண்டிருக்கும் மனிதர்களை, வேலை வாய்ப்பு இல்லாதவர்களை நேரடியாக துறைத் தனத்தாரின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்து—ஆங்கிலத்தில் சொல்வார்கள் " லான்ட் ஆர்மி " என்று—தொழில் வளத்திற் காக தரைப் படையை ஏற்படுத்தி, விவசாய வளத்திற்காக தரைப் படையை ஏற்படுத்தி நமது வளத்தைப் பெருக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, நீங்கள் கேட்ட தொகையை நீங்கள் பெறத் தான் போகிறீர்கள், அப்படிப் பெறுவதை ஆத்திரப்படாமல் பெற்றுக் கொள்ளுங்கள், எதிர் கட்சிக்காரர்கள் சொல்வது என்ன என்று கேட்பதில் அக்கரை செலுத்திப் பெற்றுக் கொள் ளுங்கள் என்று சொல்லிக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சபாநாயகர் அவர்களே, இந்த நிதி ஒதுக்கும் மசோதாவின்கீழ் பல கருத்துக்கள் இங்கு தெரிவிக்கப்பட்டன. கனம் அண்ணதுரை அவர்கள் கூறியது போல் அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்தத் தொகை ஒதுக்கப்பட்டுத்தான் தீரும் என்பதை அவர்களும் உணருகிறார்கள். அதற்குக் காரணம் இங்கு எங்கள் பக்கத்தில் அதிகமாக அங்கத்தினர்கள் இருக்கிறார்கள் என்றால் இங்கு நாங்களாகவே வந்து உட்கார்ந்து விடவில்லை, மக்கள் எங்கள் பேரில் நம்பிக்கை வைத்திருப்பதால்தான், இத்தனை பேர்கள் இங்கு வந்து உட்கார்ந்திருக்கிறோமே தவிர எல்லோரையும் அப்புறப்படுத்திவிட்டோ அல்லது யாரையாவது மோசம் செய்துவிட்டோ இங்கு வந்து உட்கார்ந்திருக்கவில்லை. இப்பொழுது இந்த நிதி ஒதுக்கப்படுகிறதென்றால் அது எங்கள் சாமர்த்தியத்தினால் அல்ல, தமிழ் மக்களின் பலத்தினால்தான் இது ஒதுக்கப்படுகிறது. ஒரு சிலர் எதிர்த்தாலும் ஒதுக்கப்

30th April 1960] [Sri C. Subramaniam]

படுகிறது. இங்கு விஷயங்கள் குறிப்பிடப்படும்போது அவைகள் ஓரளவு மக்களின் எண்ணத்தைத்தான் பிரதிபலிக்கிறது, அவர்கள் சொல்லுவதுதான் மக்களின் எண்ணத்தைப் பிரதிபலிக்கிறது என்றும் மற்றவர்கள் சொல்வது மக்களின் எண்ணத்தை பிரதிபலிப்பதாகாது என்றும் சொன்னல் அது சரியல்ல என்பதை நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இன்னும், நான் பதில் சொல்கிற முறையைப் பற்றிச் சொல்லும்போது நாடக பாணியில் நான் சொன்னதாகச் சொன்னர்கள். நான் வளர்ந்த பண்பு வேறு. நான் சிலரைப்போன்று வேஷம் போட வேண்டியதில்லே. நாடக பாணியில் நடப்பது என்பதும் என்னல் முடியாது. எனக்குத் தெரிந்த அளவில் சொல்கிறேன். ஆகவே நாடகம் நடிப்பதற்காக முயற்சித்ததும் இல்லே, அப்படி முயற்சி செய்யவேண்டிய அவசியமும் இல்லே.

SRI C. N. ANNADURAI: நல்ல நடிகர்களின் லட்சணமே தாங்கள் நடிப்பது தெரியாமல் நடிப்பதுதான். நமது அமைச்சர் அவர்கள் நல்ல நடிகராயிருக்கிறார்கள். அவருக்கே தெரியாமல் நடிக்கிறார்.

THE HON. SRI C. SUBRAMANIAM: நடிகர் நடிகரல்லாதவரைப் பாராட்டுவதைப் பார்த்து அந்தப் பாராட்டுதல்களே ஒத்துக்கொள்கிறேன். மேடையில் போய் நடிக்கும் நிலேமை எனக்கு வரவில்லே என்றுதான் குறிப்பிட்டேன். பின்னர், தமிழ் போதன மொழியாவது பற்றி கனம் அன்பழகன் அவர்கள் விரிவாக எடுத்துரைத்தார்கள். எதற்காக முடிந்துபோன விஷயத்தைப்பற்றி பேசினர், இதுபற்றி இனியும் விவாதிக்கயிருக்கும் போது அதை எதற்காக சொன்னர்கள், என்று சிறிது யோசித்து பார்த்தேன். நான் ஒரு கருத்தை வெளியிட்டேன். திராவிட முன்னேற்றக் கட்சி ஏடு எழுதியிருந்தது. அதை அவர்களுக்கு எடுத்துக் காண்பித்தேன். அதற்காக அவர்கள் வருத்தம் தெரிவித்தார்கள். அதை நான் வரவேற்கிறேன். அது ஒருபுறமிருக்க, இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகம் இதை வரவேற்கிறது என்று எழுந்து சொல்ல வேண்டிய கட்டம் ஏற்பட்டிருப்பதைப் பற்றி அவர்கள் வருந்துவார்கள் என்று நம்புகிறேன். பலர் என்னிடம் சொன்னர்கள், "ஆங்கில ஆட்சி மோகம் கொண்டிருந்தவர்களுக்கு ஆங்கில மொழி மோகம் போய் விடுமா? வெளிப்படையாக அவர்கள் இப்படிச் சொன்னலும் அவர்களுக்கு இன்னும் உள்ளாகவே அந்த மோகம் போகவில்லே, ஆகவே அவர்களே நம்பி இறங்க வேண்டாம்" என்று என்னிடம் பலர் சொன்னர்கள். அவர்களிடம் நான் "தமிழ் மக்களின் உணர்ச்சியை நம்பித்தான் இதில் இறங்குகிறேனே தவிர வேறு ஒருவரையும் நம்பி இதில் இறங்கவில்லே" என்று பதில் சொன்னேன். ஆனல் இன்று வெளிப்படையாக அவர்கள் விளக்கம் கொடுத்ததுபற்றி வரவேற்கிறேன். திராவிட முன்னேற்றக் கழகம் இதில் எந்தவிதமான மன வேறுபாடும் இல்லாமல் இதை வரவேற்பது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். ஒரு முக்கியமான கருத்து தெரிவித்தார்கள். தமிழ் புத்தகம் ஒன்று வந்தால் போதாது, பல புத்தகங்கள் வரவேண்டுமென்று

கருத்து தெரிவித்தார்கள். கட்டாயமாக வரவேண்டும். ஆனல் உடனடியாக ஒரு புத்தகமாவது வேண்டுமே இதை ஆரம்பிப்பதற்கு. ஆரம்பித்துவிட்டால் பின்னர் தாங்களாகவே பல ஆசிரியர்கள் எழுத ஆரம்பித்து விடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆகவேதான் இன்று கல்லூரியில், தமிழ் குழு தமிழில் ஒரு டெக்ஸ்ட் புக்காவது இருக்க வேண்டுமென்று நடவடிக்கைகள் எடுத்து மே மாதத்திற்குள்ளாக அது அச்சிடப்பட்டு வெளியாக வேண்டுமென்று நடவடிக்கைகள் எடுத்திருக்கிருர்கள். ஆகவே ஒரு புத்தகம்போதும் என்பதல்ல. பாடப் புத்தகங்களோடு, மற்ற ரெபரன்ஸ் புக்ஸ்-ம் வர வேண்டும். ஆகவே முதலில் ஒன்று ஆரம்பித்து வைத்தால்தான் பின்னர் வருமே தவிர இல்லாவிட்டால் வராமலே இருந்துவிடும். பின்னர், ப்ரீ-யூனிவர்ஸிட்டியைப் பற்றி சொன்னுர்கள். அங்கு ஆங்கிலத்தில் பாடம் சொல்லிக் கொடுக்கப்படுகிறதே அதை தமிழில் மாற்ற வேண்டுமென்ற கருத்து தெரிவிக்கப்பட்டது. அதை வேண்டுமானல் மறுபடியும் கல்வி ஆலோசனைக் குழு முன்னுலும், தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி குழு முன்னுலும் கொண்டு வந்து ஆராய்ச்சி செய்ய நான் தயாராயிருக்கிறேன். ஆனல் அதில் ஒரு நுட்பம் இருக்கிறது. அதை அன்பழகன் அவர்களுக்கு தெரிவிக்க விரும்புகிறேன். அதை யோசித்துப் பார்த்து அவர்கள் யோசனை சொன்னல் அதைப்பற்றி ஆலோசனை செய்யலாம். 1963–64-ல் வரக்கூடிய மாணவர்களில் பெரும்பாலோரும் இந்த ப்ரீ-யூனிவர்ஸிட்டியில் படிக்க வேண்டிய அவசியமிருக்காது. இலெவென்த் (11) ஸ்டான்டர்ட் படித்துவிட்டு வருபவர்களாகயிருப்பார்கள். ஆகவே இந்த நடவடிக்கை எடுப்பது தாற்காலிகமாக, அடுத்த வருடத்திற்குத் தான் எடுக்கவேண்டும். அப்படி ஒரு வருடத்திற்கு என்று எடுக்க வேண்டியது அவசியமா என்று ஆலோசித்த பின்னர் அவர் தமது கருத்தை தெரிவித்தால் அதன் அடிப்படையில் கல்வி ஆலோசனைக் குழுவிற்கும், தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் குழுவிற்கும் முன் இந்தக் கருத்தை வைத்து ஆலோசனை செய்து ஒரு முடிவு எடுக்க முயற்சி செய்யலாமென்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஒரு பதத்தைப்பற்றி இங்கு குறிப்பிட்டார்கள். அப்படி பல பதங்கள் சரியாகயில்லை என்று எனக்குக் கூடப்படுகிறது. அப்படி ஒரு ஆரம்பம் செய்ததினுல்தான் இப்பொழுது அதைப்பற்றிச் சொல்வதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. இல்லாவிடில் அதற்கு இடமில்லாதாகிவிடுகிறது. "புள்ளியால்" என்பது சரியான பதம் அல்ல என்று சொன்னுர்கள், இப்படி முதலில் போட்டதினுல்தான் அது சரியா இல்லையா என்று சொல்லி சரியில்லை என்ருல் அதைத் திருத்த முடிகிறது. 'Statistics' என்பதற்கு "புள்ளியல்" என்பது சரியான பதமல்ல என்ருர்கள். நான் இதில் ஒரு நிபுணன் அல்ல. ஏதோ தமிழ் பேசத் தெரியுமே தவிர இதில் நான் ஒரு நிபுணன் அல்ல. ஆகவே, இதுபோன்று குறைகள் இருப்பதை எடுத்து தெரிவிக்க வேண்டியது தமிழ் புலவர்களின், தமிழ் வல்லுனர்களின் கடமையாகும். சில சமயம் சில பதங்கள் விநோதமாக இருந்தாலும் கூட பழக்கத்தில் அது சரியாகப்போய் விடுகிறது. அது நாம் அனுபவத்தில் கண்டறிந்த

30th April 1960] [Sri C. Subramaniam]

உண்மை. ஒரு பதம் உபயோகத்தில் வந்து இதன் பொருள் இது என்று வந்துவிட்டால் சரியாகப் போய் விடுகிறது. பின்னர், அன்பழகன் அவர்கள் ஒன்று குறிப்பிட்டார்கள், அதாவது ஹிந்தியைப்பற்றி. அன்பழகன் அவர்கள் கொள்கைக்கும் என் கொள்கைக்கும் இருக்கக்கூடிய வித்தியாசம் இதுதான். என்னைப் பொறுத்தவரையில் தமிழிற்கு உரிய இடத்தில் தமிழ் அமையவேண்டும். அது ஆட்சிமொழியாக அமையவேண்டும், போதனைமொழியாக அது அமையவேண்டும், ஆராய்ச்சி மொழியாக அது அமையவேண்டும். அதே சமயத்தில் பல்வேறு பிற மொழிகளைக் கற்றுக் கொள்வதால் தமிழ் மொழிக்கு தீங்கு வந்துவிடாது. பிற மொழிகளை கற்றுக் கொண்டுதானாக வேண்டும் என்று நினைப்பவன் நான். ஹிந்தி மொழி நம் தேசத்தில் உள்ள பெரும்பாலான மக்கள் பேசும் மொழி என்ற முறையில் அதைக் கற்றுக்கொள்ள வேண்டும். தமிழ் மொழியின் பேரில் உள்ள அன்பினால் வேறு மொழி வரக்கூடாது என்று சொன்னால் ஆங்கிலத்தையும் எதிர்க்கத்தான் வேண்டும், அது நம் மொழியல்ல, 6,000 மைல்களுக்கு அப்பால் இருந்துவந்த மொழி, அது. ஆகவே அப்படிப் பார்த்தால் ஆங்கிலம் படிக்க வேண்டுமென்று சொல்வது சரியா? ஹிந்தி படிக்க வேண்டுமென்று சொல்லும்போது அது தமிழைப் புறக்கணிப்பதாகாது. தமிழிற்கு உரிய இடத்தைக் கொடுத்து விட்டு அதற்கு மேல் வேறு மொழிகளைப் பயில வேண்டுமென்று சொன்னால் நம் தகுதிக்கு தக்க அளவிற்கு மற்ற மொழிகளைக் கற்றுக்கொள்ள வேண்டியது மிக அவசியமாகும். ஆகவே, தமிழ் வேண்டுமென்று சொல்லிக்கொண்டு இந்தியைப் படிக்க வேண்டுமென்று சொல்வது முரணானதாகும் என்று சொல்வதோ அல்லது ஆங்கிலம் படிக்க வேண்டுமென்று சொல்லும்போது அது தமிழ் போதனை மொழியாக வேண்டுமென்று சொல்வதற்கு முரணானதாகும் என்று சொல்வதோ அடிப்படைக் கருத்தை புரிந்து கொள்ளாததுதான். நம் நாட்டில் மட்டுமல்ல. எந்த அன்னிய நாட்டிலும் அவர்கள் தங்கள் தாய்மொழியைப் பயில்வதோடு, தங்கள் பிராந்திய மொழியைப் பயில்வதோடு அந்நிய மொழிகள் பலவற்றையும் குழந்தைகளுக்கு போதிக்கிறார்கள் என்பதைப் பார்க்கிறோம்.

அதைப் புறக்கணிக்க வேண்டும் என்ற கருத்து யாருக்கு மில்லை. நம்முடைய அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் எட்டிய வகையில் எந்த வகையில் எல்லாம் தமிழ் மொழியை வளர்க்க முடியுமோ அந்த முறையில் எல்லாம் பாடுபட்டு வருகிறோம். ரோமன் லிபியைப்பற்றி இங்கு சொல்லப்பட்டது. தமிழ் மொழிக்கும் ரோமன் லிபியை ஏற்றுக்கொண்டால், மற்ற மொழிகளை எல்லாம் நாம் பயிலுவதற்கும் தமிழ் மொழியை மற்றவர்கள் பயிலுவதற்கும் சௌகரியமாக இருக்கும் என்றும் கருத்து தெரிவிக்கப்பட்டது. முக்கியமாக நம்முடைய மொழியை மற்ற மொழியினர் பயில வேண்டும். ரோமன் லிபியாக இருந்தால் சுலபமாக கற்றுக்கொள்ள முடியும். அதே சமயத்தில் தமிழ் 11-00 a.m.

மொழியை சுலபமாக கற்றுக் கொள்வதற்கும் வழி என்ன வென்பதை யோசிக்க வேண்டும். மற்ற மொழிகளை நாம் பயின்று கொள்ளும்போது மற்றவர்கள் யாரும் தமிழை பயில மாட்டார் கள் என்று சொல்ல முடியாது. அவ்விதம் சொல்லுகின்றவர்கள் உண்மையாகவே தெரிந்து சொல்ல மாட்டார்கள் என்று நம்பு கிறேன். அவர்களாக தமிழை சுலபமாக பயிலுவது எப்படி, என்பதைப்பற்றி யோசிக்க வேண்டும். எல்லா மொழிகளையும் சுலபமாக பயிலுவதற்கு பொது லிபி ஒன்று இருப்பது நல்லது. இது நான் சொல்லுகிற கருத்து. ஆனால் இதுதான் சிறப்புற்ற கருத்து என்று சொல்லுவதற்கு நான் தயாராக இல்லை.

SRI K. ANBAZHAGAN: நான் ரோமன் எழுத்துக்களைப்பற்றி தெரிவித்த கருத்து மக்கள் அவரவர் சொந்த மொழியிலேயே படிக்கலாம். தமிழ் மொழியை தமிழிலேயே படிக்கலாம். இதற்கு ரோமன் லிபி தேவையில்லை. பிற மொழிகளை தெரியாத வர்கள் பிற மொழிகளை பயிலுவதற்கு ரோமன் லிபியை உப யோகித்துக்கொள்ளலாம். இதன் மூலமாக பிற மொழியினர் தமிழ் மொழியை ரோமன் லிபியிலே படித்துக்கொள்ளவும் வசதி ஏற்படும் என்பதுதான் என் கருத்து.

THE HON. SRI C. SUBRAMANIAM: தமிழ் நாட்டில் தமிழும் மற்றவர்கள் பிற மொழி பயிலுவதற்கு மட்டும் ரோமன் லிபியை உபயோகித்துக்கொள்ளலாம் என்பதைப் பற்றியும் ஆலோசனை செய்து பார்க்கலாம். தமிழைப் பொறுத்தவரையில் தமிழுக்கு ரோமன் லிபியை உபயோகிக்கக்கூடாது என்பதைக் கேட்டு நான் சந்தோஷப்படுகிறேன்.

இந்த மாதிரி எந்த லிபியைப் பார்க்கும் போதும் காலத் திற்கு தகுந்த மாதிரி மாறிக்கொண்டு வருகிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய தமிழ் போல் முன் காலத்தில் எழுதுவதில்லை. ஒவ்வொரு மொழியிலும் உருவத்தை விட ஒலிதான் முக்கியமாக இருக்கிறது. ஒலியைக் கொண்டுதான் எழுத்தின் உருவம் அமைகிறது. அந்த முறையில் எழுத்துக்களை அமைத்துப் பார்க்க வேண்டும் என்று சொல்லும் போது பின்னால் அதை மாற்றவே கூடாது, அதில் மாறுதலே கூடாது என்று சொல்லும் போது, அதில் ஏற்படுகின்ற குழப்பத்தையும் நாம் உணர்ந்து பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் கல்லூரி ஆசிரியர்களுக்கு சம்பள உயர்வு கொடுக்கப் படவில்லை என்பதைப் பற்றிச் சொன்னார்கள். அதிலும் யூனிவர்ஸிட்டி கமிஷன் மான்யமும் பெறவில்லை என்றும் சொல்லப்பட்டது. இதைப் பற்றி பல சமயங்களில் பேசி யிருக்கிறேன். இதைப்பற்றி அவர்களுக்கு படிக்கக் கூடிய வாய்ப்பு இருந்திருக்காது என்று எண்ணுகிறேன். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையை எடுத்துப் பார்த்தால் பல வகுப்பு களிலும் சில பாடங்களுக்கு, நேற்று நான் இங்கு உருது படிக் கின்ற மாணவர்களைப் பற்றி சொன்னது போல், ஒரு மாணவர், இரண்டு மாணவர்கள் ஒரே ஊரில் ஒரு பக்கத்தில் இரண்டு மாணவர்கள், மூன்று மாணவர்கள் என்று இருக்கிறார்கள். இதற்காக எப்படி தனியாக ஆசிரியர்களை நியமிப்பது என்பதைப்

30th April 1960] [Sri C. Subramaniam]

பற்றியும் ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. இதைப்பற்றி திரும்ப திரும்ப ஆசிரியர்களுக்கும் யூனிவர்சிட்டிக்கும் எடுத்துக் கூறுகிறோம். இவ்விதம் அதிகமாக ஆசிரியர்களை நியமிக்கும் போது சர்க்காரில் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இதையும் நாம் திட்டமிட்டு யோசிக்கின்றோம். அந்த அளவில் பிற மொழி பயிலுகின்றவர்கள் பாதி அளவில் சேர்ந்திருந்தால் ஆசிரியர்களை நியமிப்பதற்கும் அவர்களுடைய சம்பளத்தை உயர்த்திக் கொடுக்கவும் முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதையொட்டி பிரின்ஸிபால்ஸ், தலைமை ஆசிரியர்கள் ஒரு அறிக்கை சர்க்காருக்கு கொடுத்திருக்கிறார்கள். அதைப்பற்றி பரிசீலனை செய்து உத்தரவு போடப்படும். அதே சமயத்தில் பே-கமிஷனும் கல்லூரி ஆசிரியர்களுடைய சம்பள அடிப்படையைப்பற்றி ஆராய்ந்து இருக்கிறார்கள். ஆகவே அடுத்த ஆண்டில் இந்த அறிக்கையைப் பற்றியும் பே-கமிஷனின் அறிக்கையையும் நன்றாக ஆலோசனை செய்து ஒரு நல்ல முடிவு காண முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

இன்னொன்று, முக்கியமாக தொழில் வளர்ச்சியைப் பற்றி திரு. அண்ணாதுரை அவர்களும், திரு. கல்யாணசுந்தரம் அவர்களும் வலியுறுத்திச் சொன்னார்கள். இதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க இடமில்லை. இன்னும் பல தொழில்களையும் அடுத்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்படுத்த வேண்டும். அது மட்டும் போதாது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் அதிகமான தொழில்கள் ஏற்பட வேண்டும். அதற்கு என்னென்ன செய்ய முடியுமோ அவைகளைச் செய்து கொண்டிருக்கிறோம், என்பதைத்தான் நான் சொல்லிக்கொள்கிறேன். இதற்காக மத்திய அரசாங்கத்தோடு சண்டைபோட வேண்டும், கிளர்ச்சி செய்ய வேண்டும், மேலும், மத்திய அரசாங்கத்திலிருந்து கேட்பதற்கு எங்களுக்கு திறமையில்லை என்று சொல்வதெல்லாம், அரசியலுக்கு வேண்டுமானால் வைத்துக்கொள்ளலாம். தமிழ் மக்களுக்கு எவ்வளவு திறமையிருக்கின்றதோ அந்த அளவுக்குத்தான் எங்களுக்கும் திறமையிருக்க முடியும். அந்த சக்தியைக்கொண்டு, தமிழ் மக்களின் பக்கபலத்தோடு, எவ்வளவு தூரம் தொழில்களை ஏற்படுத்த முடியுமோ அந்த அளவுக்கு முயற்சிகள் எடுத்துவருகிறோம். முக்கியமாக இரும்புத் தொழிலுக்கு முதலிடம் கொடுக்க வேண்டியது மிகவும் அவசியம். திரு. அண்ணாதுரை அவர்கள் முன்னால் இங்கு அதிகமாக இரும்பு உருக்குத் தொழில் செய்யப்பட்டிருக்கிறது, அம்மாதிரி இருந்த தொழிலை இன்று அதிகமாக விரிவு படுத்தவில்லை என்று சொன்னார்கள். முன்னால் பத்து டன் ஐம்பது டன் என்ற அளவில் கிடைத்துக் கொண்டிருந்ததாக தெரிகிறது. அதிகமான அளவில் அப்போது கிடைக்கவில்லை. சத்திய மங்கலம் என்ற இடத்தில் ஜன்னல் மலை என்று ஒன்று இருப்பதாகவும் சொல்லப்பட்டது. முன்னால் கிடைத்துக் கொண்டிருந்த அளவுக்கு இப்போது கிடைத்தால் போதாது. அந்த முறையில் இப்போது உருக்குச் செய்ய முடியுமா என்பதையும் நாம் ஆலோசிக்க வேண்டும். முன்பு அந்த

இடத்தில் மரத்திலுள்ள கரியை வைத்தே பத்து டன் 15 டன் என்று உற்பத்தி செய்து கொண்டிருந்தார்கள். இன்றைக்கு இருக்கக்கூடிய புதிய முறைகளை உபயோகித்து ஒரு சிறிய உலையை ஆரம்பிக்க வேண்டுமென்றால் 4 அல்லது 5 டன் உற்பத்தி செய்யக்கூடிய நிலையில் தான் ஏற்படுத்த வேண்டியதாக இருக்கிறது. அதோடு அன்றாடம் நமக்குக் கிடைக்கக்கூடிய நிலக்கரியை வைத்துக் கொண்டுதான் இவைகளை எல்லாம் செய்ய முடியும். முக்கியமாக நமக்கு கிடைக்கக் கூடிய நிலக்கரியை வைத்துக் கொண்டுதான் இரும்புத் தொழிலை ஆரம்பிக்க முடியும். அதிலும் இன்றைக்கு நாம் எடுத்திருக்கின்ற முயற்சிகளின் பலனாக உலகத்திலேயே பெரிய அளவில் நிலக்கரியை வெட்டி எடுப்பதற்கான திட்டத்தை நாம் நெய்வேலியில் ஆரம்பித்திருக்கிறோம். அது வெற்றிபெறும் என்று நாம் அனைவரும் எண்ணிக் கொண்டிருக்கிறோம். இதிலே யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்காது என்று எண்ணுகிறேன். இதன் முன்னேற்றத்தைப் பற்றி அடிக்கடி மத்திய மந்திரிகள் வந்து பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். பக்கத்தில் இருக்கக்கூடிய நமது கோவிந்தசாமி அவர்களும் போய் பார்த்துக் கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறேன். . . . (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி: அடிக்கடி போய் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.) மிகவும் சந்தோஷம். இந்த வேலை துரிதமாக நடைபெறுவதற்காக எல்லா முயற்சிகளும் செய்யப்பட்டு வருகின்றன. நாம் எடுத்துக் கொள்ளுகிற முயற்சிகளோடு நில்லாமல் இதை எதற்காக எல்லாம் உபயோகித்துக் கொள்ளலாம் என்பதைப் பார்க்க கிழக்கு ஜெர்மனியிலிருந்து நிபுணர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் சேலத்திற்குப் போகிறார்கள். அதன் பின்னால் மேற்கு ஜெர்மனி நிபுணர்கள் வந்து பார்க்கிறோம் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல. "சிறிய பரீட்சை முறையில் செய்து பார்த்து, நாங்களும் அபிப்பிராயம் சொல்கிறோம்" என்று மூன்று நான்கு கடிதங்கள் வந்திருக்கின்றன. "நெய்வேலியிலிருந்து 100,200 டன் நிலக்கரி கொடுத்தால் நாங்கள் பரீட்சைப் பண்ணிப் பார்த்துக் கொடுக்க முடியும்" என்று எழுதியிருக்கிறார்கள். ஆகவே, நெய்வேலி நிலக்கரி கைக்குக் கிடைப்பதைப் பொறுத்திருக்கிறது என்று கவனத்தில் வைத்தால் இரும்புத் தொழில் நம்முடைய ராஜ்யத்தில் ஏற்படுவதை யாரும் தடை செய்ய முடியாது; இதுவரையில் அது ஏற்படவில்லை என்றால், அதற்கு திறமைக் குறைவு காரணம் அல்ல, நமக்கு நிலக்கரி இதுவரையில் கிடைக்காமல் இருந்ததுதான் என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இதற்கு யார் மீதாவது பழி போடவேண்டுமென்றால் ஆங்கில ஆட்சியின் மீதுதான் போடவேண்டும். ஆங்கில ஆட்சி போனவுடனே இந்த இயக்கத்தை ஆரம்பித்துவிட்டோம். வேறு எதையும் ஆரம்பிப்பதற்கு முன்னால், அங்கிருக்கும் நிலக்கரியைத் தோண்டி எடுப்பதற்காக, முதல் திட்டமாக அதை எடுத்துக்கொண்டு, பரீட்சார்த்த திட்டமாக நிறைவேற்றினோம் என்று எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அந்த முறையில் இரும்புத் தொழிலைக் கொண்டுவர எல்லாவிதமான முயற்சிகளும்

30th April 1960] [Sri C. Subramaniam]

நடைபெற்றுவருகின்றன, அது நடைபெறும் என்ற நம்பிக்கை இருக்கிறது.

சேதுசமுத்திரத் திட்டத்தைப்பற்றியும், தூத்துக்குடி துறை முகத் திட்டத்தைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். இது பற்றியும் பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது. முன்பு எடுத்துச் சொன்னது போல், "பத்து கோடி ரூபாய் அளவிலே முடிந்து விடும்" என்று இவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள். மற்ற நிபுணர்கள் "முப்பது கோடி ரூபாய் ஆகும்" என்று சொல்லி யிருக்கிறார்கள். ஒன்றுக்கு மூன்று பங்காக இருக்கிறது. இரண்டு விதமான அபிப்பிராயம் உள்ள நிபுணர்களையும் சேர்த்து வைத்துப் பேசி யார் சொல்வது சரியோ அதை ஏற்றுக் கொள்வது, அல்லது இரண்டுக்கும் மத்தியில் ஒரு முறையை ஏற் படுத்துவது என்று அந்த முறையில் எடுத்துக்கொள்வது பற்றி இப்பொழுது பரிசீலனையில் இருக்கிறது. அந்தப் பரிசீலனை முடிந்து எப்படியும் தூத்துக்குடி துறைமுகத் திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டுவிடும். தூத்துக்குடி துறைமுகத் திட்டத்தை எடுத்துக்கொள்ளும்போது, சேது சமுத்திரத் திட்டம் வந்தால், அதற்கேற்றபடி தூத்துக்குடி எப்படி அமையவேண்டுமோ அந்த முறையிலே அமைக்க வேண்டும் என்பது எண்ணம். இதில் கொஞ்சம் தாமதமானாலும், சேதுசமுத்திரத் திட்டத்தையும் இத்துடன் இணைக்கக்கூடிய முறையில், ஒரு இணைக்கப்பட்ட முறையில் எடுத்துக் கொள்ளப்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் மறுபடியும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நாம் எவ்வளவு காரசாரமாகப் பேசிக்கொண்டாலும்—அரசியலில் காரசாரம் இருக்கத்தான் வேண்டும், எல்லோரும் சுமுக மாகப் பேசிக்கொண்டேயிருந்தால் சட்டப்படிக்கூட காரசாரம் இல்லாமல் போய்விடும். ஆகையால் கொஞ்சம் காரசாரம் இருக்க வேண்டியது அவசியம் என்றாலும்—காரியங்கள் செய் வதிலே அந்தக் காரசாரத்தைக் கொண்டுவந்து, விருப்பு வெறுப்புகளைக் கொண்டுவந்து விடாமல், காரியங்கள் செய்வ திலே நாம் எல்லோரும் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI C. N. ANNADURAI: சாரம் இருக்கட்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சாரம் என்றாலும், அடித்துக் கொண்டு போகிற மாதிரி கொண்டுவந்துவிடக்கூடாது அல்லவா? காரியம் நிறைவேறும் முறையில், காரத்தையும் சாரத்தையும் வைத்துக் கொண்டு, வேறு பல விதத்தில் இருக்கும் காராசாரத்தை விட்டுவிட்டு நாமெல்லோரும் முயற்சி செய்ய வேண்டும் என்ற கருத்தைத்தான் நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

ஆகையால், நான் ஏதோ சில கருத்துக்களை தெரிவிக்கும் போது, அவர்களுக்குப் புண்படும் முறையில் கருத்தைத் தெரிவித்திருந்தாலும் சரி, புண்படாத முறையிலே தெரிவித்திருந்

தாலும் சரி, நான் அவர்களை மிகவும் வற்புறுத்தி கேட்டுக் கொள்வது இதையெல்லாம் வாதங்கள் பிரதிவாதங்கள் என்று நினைத்து கொண்டு ஒவ்வொருவரும் எடுத்துச் சொல்வதற்கு, அவரவர்களுடைய கட்சியை எடுத்துச் சொல்வதற்குக் கடமைப்பட்டிருக்கிறோம் என்றாலும் அரசியல் முறையிலே செய்யும் சில தவறுகளைப் பயன்படுத்துவதற்கு நீங்கள் முயற்சி செய்யும்போது, அதற்கு நாங்கள் பதில் சொல்வதற்கும் கடமைப்பட்டிருக்கிறோம். இல்லாவிட்டால், நான் இங்கு இருக்கவேண்டிய அவசியம் இல்லை. அது ஒருபுறமிருக்க, இன்றைக்கு யார் இங்கு மந்திரிசபையிலிருந்து பணியாற்றினாலுங்கூட, கடைசியில் நாம் மனதிலே வைத்துக் கொள்ளவேண்டியது நம்முடைய நாட்டு மக்களுடைய வாழ்வு எப்படி உயர முடியும், நம் நாட்டிலே எப்படிப்பல தொழில்கள் அமைக்க முடியும், நம் நாட்டிலே எப்படி விவசாய உற்பத்தியைப் பெருக்க முடியும், நம் நாட்டிலே இருக்கும் குழந்தைகள் நல்ல அறிவு உள்ளவர்களாக திறமை உள்ளவர்களாக, நல்ல பண்பு உள்ளவர்களாக வாழ முடியும் என்பதுதான் அடிப்படையாக இருக்கவேண்டும். மற்ற எதுவாக இருந்தாலும் சரி, இவைகள் தான் அடிப்படையாக இருக்க முடியும். இந்த அடிப்படையிலிருந்து தவறினால், எந்தக் கொள்கையாக இருந்தாலும் பயன்படாது என்று நான் வலியுறுத்திக் கூறுகிறேன். திராவிட முன்னேற்றக் கழகக் கொள்கையாக இருந்தாலும் சரி. கம்யூனிஸ்டுக் கட்சிக் கொள்கையாக இருந்தாலும் சரி, காங்கிரஸ் கட்சிக் கொள்கையாக இருந்தாலும் சரி, அரசியல் கொள்கையே இல்லாதவர்களாக இருந்தாலும் சரி, எல்லாவற்றிற்க்கும் அடிப்படையாக இருக்கக் கூடியது மனித சக்தி. கை கால்களை உபயோகப்படுத்துவது மட்டுமல்ல, நல்ல அறிவோடு இணையும் போதுதான் மனித சக்தி சிறந்து விளங்கும். அந்த மனித சக்தியை வளர்த்து அதை உபயோகப்படுத்தி நம்முடைய நாட்டு வளத்தைப் பெருக்குவதிலே எந்த அளவு நாம் ஒற்றுமையாக இருக்கிறோமோ அந்த அளவுக்கே காரியங்கள் நடைபெற முடியும்.

"மந்திரி சபையினுடைய மதிப்பு குறையக் கூடாது" என்ற கருத்தைக்கூட கனம் அண்ணாதுரை அவர்கள் சொன்னார்கள். மிகவும் வரவேற்கிறேன். அந்த முறையிலே அவர்களுடைய கட்சிக்காரர்கள் வெளியே பேசும்போது தனிப்பட்ட முறையில் எங்களை வேண்டுமானால் சொல்லிக் கொள்ளட்டும், ஆனால் தமிழ்நாட்டு மந்திரிகளுக்கு குறை ஏற்படுகிற முறையில், இழுக்கு ஏற்படும் முறையில் பேசுகின்றோமா—அது உண்மையாக இருந்து பேசப்பட்டாலும் பரவாயில்லை, வேறுவிதமாகப் பேசுகிறோமா—என்று யோசித்துப் பேசும் படியான சூழ்நிலை ஏற்பட்டால் பல சூழ்நிலைகளும் வந்து அமைந்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை. அப்பேர்ப்பட்ட சூழ்நிலை ஏற்படுவதற்கு நானும் ஏதாவது உதவ முடியுமானால் அதைச் செய்வதற்குத் தயாராயிருக்கிறேன்

30th April 1960] [Sri C. Subramaniam]

என்று அவர்களுக்குச் சொல்லிக் கொள்ளுகிறேன். இன்றைக்கு அது மிக முக்கியமாயிருக்கிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். நான் பல இடங்களில் சொல்லியிருக்கிறேன். யாராவது ஒருவர் தமிழ் தெரிந்தவர் வெளியே இருந்து வந்து, அரசியல் பிரசங்கங்களைக் கேட்டுப் போனால், நம்முடைய தமிழ்ப் பண்பைப் பற்றி என்ன நினைப்பார் என்று யோசிக்கும் போது எனக்கு உண்மையிலேயே வருத்தம் ஏற்படுகிறது. அதைத் தவிர்க்க எல்லோரும் கடமைப்பட்டிருக்கிறோம். அந்தக் கடமையை நிறைவேற்ற, இங்கிருக்கும் மக்கள் பிரதிநிதிகளுக்கும் பொறுப்பு இருக்கிறது என்பதையும் நான் வலியுறுத்திச் சொல்கிறேன். இந்த முறையிலே நாம் பல காரியங்கள் செய்து, அதன் மூலமாக நம்முடைய நாட்டு மக்களின் வாழ்வு வளம்பெற முயற்சி செய்வதற்கு, கடவுள் பேரில் நம்பிக்கை இருக்கிறது என்ற காரணத்தால், எல்லாம் வல்ல இறைவன் அருளவேண்டும் என்று நான் பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER: The question is—

"That the Madras Appropriation (No. 2) Bill, 1960 (L.A. Bill No. 21 of 1960) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2, 1 and the Schedule were put and carried.

The Preamble was put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras Appropriation (No. 2) Bill, 1960 (L.A. Bill No. 21 of 1960) be passed.

The motion was put and carried and the Bill was passed.

MR. SPEAKER: கடந்த இரண்டு மாத காலமாக இந்தச் சபையில் பட்ஜெட் விவாதம் நடந்து, இன்றைய தினம் முடிந்து விட்டது. நீங்கள் எல்லோரும் என்னுடன் ஒத்துழைத்து இந்தச் சபை நடவடிக்கைகளை வெற்றிகரமாக முடித்துத் தந்ததற்கு உங்கள் எல்லோருக்கும் என்னுடைய நன்றி. I now adjourn the House *sine die*. 11-17 a.m.

The House then adjourned *sine die*.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. STATUTORY RULES AND ORDERS.

Nil.

### B. REPORTS, NOTIFICATIONS AND OTHER PAPERS.

93. *The list of Unstarred Questions for* 30—4—1960 (*Question Numbers* 454 *to* 523) *together with separate statements for Question Numbers* 1550, 1568, 1867 *and* 1682 (*New Numbers* 470, 471, 487 *and* 508).